# சந்நியாசி



இயற்றியவர்

சுவாமி சித்பவானந்தர்

## ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்

### இயற்றிய மிகச் சிறிய நூல்கள்

| | | |
|---|---|---|
| மாணுக்கன் | ... | 1-25 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... | 1-25 |
| சைவன் யார்? | ... | 1-25 |
| ஆலய வழிபாடு | ... | 1-25 |
| மனிதனது நிஜ சொரூபம் | ... | 1-25 |
| சிவதத்துவம் | ... | 1-25 |
| ஆத்ம சக்தி | ... | 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... | 1-00 |
| இந்துமதமும் கிறிஸ்துவ மதமும் | ... | 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... | 1-00 |
| கணபதி | ... | 1-00 |
| நன்நெறிகளும் அருள் வாக்குகளும் | ... | 0-80 |
| சூரிய நாராயணன் | ... | 0-75 |
| தெய்வீக மகிமைகள் | ... | 0-75 |
| முருகக் கடவுள் | ... | 0-75 |
| வர்ணுச்ரம தர்மம் | ... | 0-70 |
| தாயுமான சுவாமி ஆலயத்தில் தத்துவ அமைப்பு | ... | 0-60 |
| விஷ்ணு தத்துவம் | ... | 0-50 |
| விவேகானந்தரின் வீரகர்ஜனை | ... | 0-40 |
| கந்தர் அனுபூதி | ... | 0-30 |

**விவரங்களுக்கு:**

**ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்**
திருப்பராய்த்துறை-639 115

# பொருளடக்கம்

# சந்நியாசி

## இயற்கையின் திட்டம்

ஆராய்ச்சிகளுள் இயற்கையைப்பற்றிய ஆராய்ச்சியே சாலச்சிறந்தது. ஏனென்றால் இயற்கையின் நடைமுறையில் பெருந்திட்டம் ஒன்று உண்டு. குருட்டுப் போக்கு எதுவும் அதனிடத்து இல்லை. தாறுமாறான நடைமுறைகளை இயற்கையில் காணமுடியாது. எங்குத் திரும்பி அதன் எப்பகுதியைக் கவனித்துப் பார்த்தாலும் அதன் ஒழுங்குப்பாடே புலனாகும். இயற்கைதான் உண்மையான வேதம். அது மனிதனால் சிருஷ்டிக்கப்பட்டதன்று. தானாக அது பரம்பொருளிடத்திருந்து தோன்றி வந்துள்ளது. இயற்கை என்னும் வேதம் உயிர்கள் அனைத்துக்கும் பொதுவானது. அதை முறையாக அறிந்துகொள்பவர்க்கே மெய்யறிவு வாய்க்கிறது. இயற்கையைச் சரியாக அறிந்துகொள்பவன் வேதத்தை அறிந்தவன் ஆகிறான்.

தன் சொரூபத்தில் அடங்கியுள்ள அனைத்தையும் இயற்கையானது ஓயாது பக்குவப்படுத்திக்கொண்டு வருகிறது. இயற்கையில் சரம் அசரம், சேதனம் அசேதனம் என்னும் பகுதிகள் உள. நம் அறிவுக்கு எட்டுதற்பொருட்டு இப்படி இரு பகுதிகளாக அதை நாம் பிரித்து வைத்துக்கொள்கிறோம். இயற்கையின் இயக்கம் நமக்குக் கட்புலன் ஆகிற பகுதியை சரம் என்கிறோம்; கட்புலனாகாததை அசரம் என்கிறோம். உயிரோடும் அறிவோடும் கூடியிருப்பதைச் சேதனம் என்கிறோம்;உயிர் அற்றது போன்றும் அறிவு அற்றது போன்றும் தென்படுவதை அசேதனம் என்கிறோம். இப்படியெல்லாம் நம் பொருட்டு நாம் அதைப்பகுத்து வைத்திருக்கிறோம்.

எனினும் எல்லாப் படித்தரங்களிலுமிருக்கின்ற பொருள்கள் அனைத்துக்கும் இயற்கையினிடத்து இடமுண்டு. அவை அனைத்தையும் தொகுத்துவைத்து அதை இயற்கையென்றும், ஜகத் என்றும், பிரபஞ்சம் என்றும், பிரகிருதி என்றும், சக்தி என்றும், மாயை என்றும் பல சொற்களால் நாம் சுட்டிக் காட்டுகிறோம். அதன் நடைமுறையில் உள்ள ஒழுங்குப்பாடு வியப்புக்குரியது. முறை வழுவாது அது தன் திட்டத்தை நிறைவேற்றி வருகிறது. அதன் நடைமுறையை எவ்வளவுதான் தடுக்க முயன்றாலும் அதன் செயல் தடைப்பட்டுப்போவதில்லை. அதன் திட்டம் இன்னதென்று நாம் அறிந்துகொண்டு அதற்கு உடந்தையாய் இருந்தால் நாம் முன்னேற்றமடைகிறோம். அதன் திட்டத்துக்கு நாம் தடைகள் போட்டால் நமது முன்னேற்றத்துக்கே நாம் இடுக்கண் செய்துகொள்பவர்கள் ஆகிறோம். தன் சொரூபத்தில் அடங்கியிருக்கும் ஒவ்வொரு பகுதியையும் பரிபூரண நிலைக்குக் கொண்டுவர இயற்கை முயன்று கொண்டிருக்கிறது. அதனூடு அடங்கியுள்ள சில பகுதிகளை ஆராய்ச்சிக்கு எடுத்துக் கொள்வோம். இயற்கையில் ஆங்காங்கு கற்கள் அமைந்து கிடக்கின்றன. அவைகளில் சில மலைகள் ஆகவும் வடிவெடுத்திருக்கின்றன. கற்கள் அசைவற்றவைகள் போன்று தென்படுவதால் அவைகளை அசலம் என நாம் பாகுபடுத்துகிறோம். செயலற்றவைகள் போன்று தென்படுகிற கற்களிலே செயல்கள் நிகழ்ந்து வருகின்றன. நம்மால் அளக்கமுடியாத நீண்ட காலாந்தரத்தில் நடைபெற்று வருகிற செயல் நம் அறிவுக்கு எட்டுவதில்லை. ஆதலால் செயலற்ற நிலையென அதை நாம் ஒதுக்கி வைக்கிறோம். கற்கள் படிப்படியாகத் தங்களை மேல்நிலைக்குக் கொண்டு வருகின்றன. ரத்தினங்கள் என்று நம்மால் போற்றப்படுபவைகளெல்லாம்வெறும் கற்களேயாம்.

ஆனால் பரிபாகமடைந்து அவைகள் வெவ்வேறு நிறங்களிலும் வடிவங்களிலும் ஒளிர்கின்றன. ஆகையால் அவைகளை ரத்தினங்கள் என்கிறோம். வெறும் அடுப்புக்கரிபோன்ற வஸ்து பூமியில் இறுகிக் கல்லாக விளைந்து பிறகு வைரமாகப் பூர்த்தியாகிறது. கிட்டத்தட்ட சுயம்பிரகாசம்பெற்று வைரம், வைடூரியம், மாணிக்கம், மரகதம்போன்ற ரத்தினங்கள் ஒளிர்கின்றன. இவை யாவும் பரிபூரண நிலையை எட்டியுள்ள கற்கள் எனலாம். இனி மரம் ஒன்று இருக்கிறது. அது பல நூற்றாண்டுகளாக வளர்ந்து வைரம் ஏறப்பெறுகிறது. வைரம் ஏறிய நிலையில் மரம் ஒன்று பரிபூரண நிலையை எட்டியதாகிறது. பிறகு அதைக்கொண்டு செய்யப்படுகிற பொருள்களிடத்தும் அந்த மரத்தின் பரிபூரணமே பொலிகிறது. நெடுங்காலம் நிலைத்திருந்து பயன்படுபவைகளாக அப்பொருள்கள் அமைகின்றன. மரம் ஒன்று எய்துள்ள பரிபூரணத்தின் விளைவு அதுவாம். கனி ஒன்று அடைகிற பரிபூரணநிலை வியப்புக்குரியதாம். நன்றாகக் கனிந்த கனியிலே மன்னுயிர்களுக்கான இனிய உணவு அமைந்திருக்கிறது. புதிய மரம் செடி கொடிகளை உண்டுபண்ணுவதற்கான வித்துக்களும் அதே கனியினுள் அமைந்திருக்கின்றன. இப்படி இயற்கையிலுள்ள அனைத்தும் படிப்படியாக அதனதன் இயல்புக்கு ஒத்த பரிபூரண நிலையை எட்டுகின்றன. அதே திட்டம் மனிதனுக்கும் உரியதாகிறது. இயற்கையின் வெவ்வேறு சொரூபங்களில் மனிதனும் தனக்கேற்றஇடத்தை வகித்துள்ளான். மனிதன் இயற்கையை ஆளவந்தவனும் அல்லன்; அதை அடிமைப்படுத்த வல்லவனும் அல்லன். இயற்கையோடு தெய்வீக இணக்கம் வைத்து இயற்கைத் தாயை முறையாகச் சேவித்து தாயின் அருள் பிரசாதத்தைப் பெற்றுத் தன்னைப் பரிபூரணன் ஆக்குதற்கென்றே மனிதன்

வாழ்ந்து வருகிறான். தான் இன்புற்றிருப்பதல்ல மனிதனது வாழ்க்கைப் பயன்; தான் பரிபூரணன் ஆவதே மானுடப் பிறவியின் முடிவான குறிக்கோளாம். அந்த முடிவான குறிக்கோளை எட்டிய மனிதனை சந்நியாசி என்கிறோம். ஏனென்றால் மனிதன் தன்னைப் பக்குவப்படுத்தியதன் பயன்கள் அனைத்தும் சந்நியாசி என்னும் சொல்லிலே அடங்கிக்கிடக்கின்றன. அனைத்தையும் பரிபூரண நிலைக்குப் பக்குவப்படுத்திக்கொண்டு வருகிற இயற்கைத் தாயானவள் மனிதனையும் அவனுக்குகந்த பரிபூரண நிலையின்கண் கொண்டுவந்து சேர்க்கின்றாள். அந்தப் பரிபூரணநிலையிலே அவன் சந்நியாசி என்று அழைக்கப்படுகிறான்.

## புல் முதல் பிரம்மா பரியந்தம்

பிரபஞ்சம் முழுதும் ஜீவர்களால் நிரப்பப் பெற்றிருக்கிறது. இந்த ஜீவகோடிகள் எண்ணிக்கையில் அடங்கா. அனந்தம் என அவைகள் இயம்பப்படுகின்றன. சொல்லால் எளிதில் விளக்குதல் பொருட்டு அவைகளைப் பொதுவாகப் புல் முதல் பிரம்மா பரியந்தம் எனத் தொகுத்துரைக்கிறோம். புல்லைவிடப் பரிணமத்திலே ஆரம்பதசையிலிருக்கும்ஜீவர்கள் அனந்தம். மண்ணினுள் இருக்கும் பேக்டீரியா (bacteria) என்று ஆங்கிலத்தில் சொல்லப்படும் அணுவுயிர்கள் முற்றிலும் மண்மயமாயிருக்கின்றன. அவைகளை யாரே கணக்கெடுக்க வல்லவர்! இத்தனை உயிர்களும் உயர்நிலை அடைதற்பொருட்டு ஓயாது முயன்று கொண்டிருக்கின்றன. ஜனனம் மரணம் என்னும் மாறுதல்கள் அவைகளின் முன்னேற்றத்துக்குப் பெரிதும் பயன்பட்டு வருகின்றன. ஜனன மரணத்தைச் சரியாக அறிந்துகொள்ளுகிறவர்கள் ஒன்றைக் குறித்து இன்புறவோ மற்றொன்றைக் குறித்துத்

துன்புறவோ அவசியமில்லை. ஒரு படித்தரத்திலிருக்கும் உயிர் மற்றொரு படித்தரத்துக்கு மேலேறுதற்கு அளப்பரிய காலம் எடுத்துக்கொள்கிறது; எண்ணிறந்த பிறப்பு இறப்பு என்னும் செயலில் ஈடுபடுகிறது. இப்படி மேலேறி வருகிற உயிர்கள் அஃறிணையினின்று உயர்திணை எய்துதற்கு எடுத்துக் கொள்ளும் காலதேச வர்த்தமானத்துக்கு அளவை கிடையாது. உயர்திணையை எட்டியுள்ள உயிர்களுக்கு இன்ப துன்பங்கள் வெளிப்படையாக மிக அதிகரிக்கின்றன. துன்பத்தைத் தவிர்த்து இன்பத்தில் நிலை நிற்க அறிவுடைய உயிர்கள் அனைத்தும் முயன்று வருகின்றன. குறைந்த துன்பமும் நிறைந்த இன்பமும் வாய்க்கப்பெற்ற ஜீவர்களை விண்ணவர்கள் என்கிறோம். இத்தனைவித ஜீவர்களுக்குத் தலைவனாய் இருப்பவர் பிரம்மா என அழைக்கப்படுகிறார். ஜீவர்களின் தொகையே படைப்புத் தெய்வமாகிய பிரம்மதேவன் என்பது தத்துவ விளக்கமாகும். சிருஷ்டி கர்த்தாவாகிய இந்த பிரம்மாவும் ஒரு ஜீவன் எனக் கருதப்படுகிறார். இத்தனை வித ஜீவாத்மாக்கள் அன்னை பிரகிருதித்தாயின் கர்ப்பத்தில் கட்டுண்டு கிடக்கின்றன.

தாயின் வயிற்றிலிருக்கும் சிசு ஒன்று கர்ப்பவாசம் பண்ணுகிறது என்கிறோம். தாயின் கருவிலே வசித்திருப்பதன் மூலம் சிசு ஒன்று தனக்குரிய உருவத்தைச் சில மாதங்களுள் எய்துகிறது. கர்ப்பத்தில் அது அடைய வேண்டிய வளர்ச்சி முழுதையும் பெற்றான பிறகு கர்ப்பத்தை விட்டு அது வெளியில் வருகிறது. அப்படி வெளியில் வருவதைப் பிறப்பு என்கிறோம். மீண்டும் புதியதொரு வடிவம் எடுப்பதற்கு அது கர்ப்பத்துக்குத் திரும்பிப்போகும் செயலை இறப்பு என்கிறோம். கர்ப்பவாசம் அல்லாத நிலை நம் போன்ற ஜீவர்களுக்கு இருந்து வருவதை உலக வாழ்வு என்கிறோம்.

ஆனால் இந்த உலக வாழ்வு, மாய்வு ஆகிய முழுதுமே பிரகிருதித்தாயின் கர்ப்பத்தினுள் நிகழ்ந்து வருகிற செயல்களாம். எல்லாவிதமான பிறவிகளுக்கிடையிலும், எல்லா விதமான ஜீவபோதங்களுக்கிடையிலும், எல்லாவிதமான முன்னேற்றங்களுக்கிடையிலும் ஜீவர்களாகிய நாம் அனை வரும் யாண்டும் பிரகிருதித் தாயினிடத்துக் கர்ப்பவாசம் செய்து வருகிறோம். அத்தகைய கர்ப்பவாசம் நமக்கு முற்றிலும் இன்றியமையாதது. அதன் மூலமாகவன்றி நமக்குச் சிறிதேனும் முன்னேற்றமில்லை. புல் நிலையிலிருக்கின்ற உயிர் ஒன்று படிப்படியாகப் பரிணமித்துப் படைப்புத் தெய்வமாகிய பிரம்மதேவனுடைய நிலையை எட்டமுடியும். ஜீவர்களுக்கிடையில் உச்சநிலையை எய்தியிருப்பவர் பிரம்ம தேவன். பிரம்மாவினுடைய பதவியை அடையப்பெறு மலேயே பிறவிப் பெருங்கடலை நீந்த ஜீவன் ஒருவனுக்கு இயலும். அதற்குற்ற வழியை அறிந்து கொள்பவனே மக்களுள் மேலோன் ஆகிறான்.

சிசு ஒன்றினுக்குக் கர்ப்பவாசம் முற்றிலும் இன்றியமை யாதது என்பது வெளிப்படை. ஆனால் கர்ப்பத்தினுள்ளே அச்சிசு பெறவேண்டிய வளர்ச்சியையெல்லாம் பெற்றான பிறகு அது என் செய்கிறது? தன்னை உருவாக்கிய கர்ப்பத்தைத் துறந்து விட்டு அது வெளியே கிளம்புகிறது. கர்ப்பத்தைத் துறத்தல் அதற்கு முற்றிலும் அவசியமாகிறது. அதே முறையில் பிறவிப் பெருங்கடலாயிருக்கின்ற பிரகிருதித்தாயின் கர்ப்பத்தினின்று வெளியே கிளம்புபவன் சந்நியாசி எனப்படுகிறான். அவனுடைய செயல் ஒன்றே செயற்கரிய செயல் என்பதற்கு இயற்கையினிடத்து வேண்டியவாறு சான்றுகள் காணலாம். மண்ணினுள் விளைந்து ரத்தினமாக வடிவெடுத்துள்ள கல் ஒன்று தனது பிறப்

பிடத்தை விட்டு வெளியேகும்பொழுதே அது நன்கு பயன் படுவதாகிறது. அது உருவான இடத்திலேயே மறைபட்டுக் கிடக்குமாகில் அதனால் உலகுக்குப் பயன் ஒன்றுமில்லை. பிறப்பிடத்தைத் துறக்கிறபொழுதே அது நன்கு பயன்படு கிறது. வளர்ந்து வஜ்ரமாக மாறிய மரம், தன்னை வளர்த்த நிலத்தை விட்டுப் பிரித்தெடுத்தான பிறகே உலகுக்கு நன்கு பயன்படுகிறது. அப்படிப் பூமியினின்று பிரித் தெடுப்பது அதன்கண் நிகழும் துறவு எனப்படும். நன்கு கனிந்த கனி தன்னை வளர்த்த மரத்தைத் துறந்து விட்டுத் தரையில் விழுகிறது. அப்படியல்லாது தனக்கு உருக் கொடுத்த மரத்திலேயே ஒட்டிக் கிடக்குமாகில் அது ஒன்றுக்கும் உதவாது அழுகிப்போம். தன்னை உருவாக்கிய மரத்தைத் துறப்பதால் மற்ற உயிர்களுக்கு அது நல்லுண வாகிறது. புதிய மரத்தை உண்டுபண்ணுதற்குத் தகுதி வாய்ந்த வித்து ஆகவும் அது அமைகிறது. ஆக, துறவின் மூலமாகவே தன் வாழ்வை அது பூர்த்தி பண்ணுகிறது. பிரகிருதித் தாயினிடத்து எண்ணிறந்த பிறவிகளை எடுத்து எடுத்து வாழ்க்கைப் பயனை முற்றிலும் அறிந்துகொண்டுள்ள ஜீவன், தன்னைச் சாலப் பரிந்து வளர்த்து உருவாக்கி வந்த பராசக்தியின் கர்ப்பத்திலிருந்து தன்னை விடுவித்துக்கொள் கிறான். அப்படி அவன் விடுவித்துக்கொள்ளும் செயலைத் துறவு என்கிறோம். துறவின் மூலமாகவன்றித் தனது வாழ்வைப் பூர்த்திபண்ண அவனுக்கு இயலாது. புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள ஜீவகோடிகள் அனைத்துக்கும் இயற்கையினூடுள்ள வாழ்வை நல்கி, அனுபவத்தைச் சொரிந்து, விவேகத்தை வளர்ப்பது அன்னை பராசக்தியின் முதல் செயல். பிறகு அந்த விவேகிகளைத் துறவுக்காக ஆயத்தப்படுத்துவது அவளது இரண்டாவது செயல்.

## சந்நியாசம் என்றால் என்ன ?

சந்நியாசம் என்னும் சொல்லின் உட்பொருளை அறிந்து கொள்வது அவசியமாகிறது. சம் + நியாசம் = சந்நியாசம் என இரண்டு சொற்களின் சேர்க்கையால் இந்தக் கூட்டுச் சொல் உண்டாகிறது. சம் என்பது முற்றிலும் எனப் பொருள்படுகிறது. நியாசம் என்பது விட்டு விடல் எனப் பொருள்படுகிறது. ஆகவே சந்நியாசம் என்னும் சொல்லின் பொருள் முற்றத் துறத்தலாம். எதைத் துறக்கவேண்டும், ஏன் துறக்கவேண்டும் என்னும் கேள்விகள் ஈண்டுப் பிறக்கின்றன. உயிர்கள் அனைத்தும் ஒரு நிலையைத் துறந்து மற்றொரு நிலையை எய்துகின்றன. புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள ஜீவர்கள் தத்தமக்கு அமைந்த கீழான பிறவிகளைத் துறந்துவிட்டு மேலான பிறவிகளுக்கு வந்துள்ளன. துறத்தல் மூலமாகவே உயிர்கள் அனைத்துக்கும் மேலாம் நிலைகள் வாய்க்கின்றன. துறத்தல் இயற்கையின் கூறு என்று இயம்பலாம். விவேகம் என்னும் கண்கொண்டு இயற்கையைப் பார்த்தால் துறவு யாண்டும் நிகழ்ந்து வருவதைக் காணலாம்.

உயிர்கள் வாழ்விலே அடைந்துள்ள நிலைகளைப் பலப்பல ஞான பூமிகள் என்றும் அக்ஞான பூமிகள் என்றும் பகர்கிறோம். மனிதன் ஞான பூமிகளுக்கும் அக்ஞான பூமிகளுக்கும் இடை நிலையில் இருக்கிறான். சிற்றுயிர்கள் இருந்து வரும் நிலைகளை அக்ஞான பூமிகள் என்கிறோம். மனிதன் இப்பொழுது பெற்றிருக்கும் நிலையும் இனிப் பெறுதற்கிருக்கும் உயர்நிலைகளும் சேர்ந்து ஞான பூமிகள் எனப்படுகின்றன. கல் என்னும் உயிர் ஜடாவஸ்தையில் இருக்கிறது. ஸ்தாவரங்கள் என்பன சுஷுப்தி அவஸ்தையில் இருக்கின்றன. விலங்குகளும் பறவைகளும் சொப்பனாவஸ்தையில்

இருக்கின்றன. இவை யாவும் அக்ஞான பூமிகளில் சேர்க்கப் பட்டுள்ளன. மனிதன் சாதாரணமாக அனுபவித்துவரும் விழிப்பு நிலையை ஜாக்ரதாவஸ்தை என்கிறோம். தான் பெற்றுள்ள ஜாக்ரதாவஸ்தையின் துணைகொண்டே அதிலும் மேலான ஞான பூமிகளை எட்ட மனிதன் முயலுகிறான். மானுட நிலைக்கு வந்துள்ள ஜீவன் மற்ற சிற்றுயிர்கள் உழன்றுவரும் அக்ஞான பூமிகளை ஏற்கனவே துறந்து விட்டான். அக் கீழ்நிலைக்குத் திரும்பிப்போக அவன் எண்ணுவதில்லை. இப்பொழுது அவன் படைத்திருக்கும் மானுட நிலையானது மற்றவைகளைத் துறந்ததன் பயனாகவே வாய்த்திருக்கிறது. ஆதலால் துறவு என்னும் அரிய செயல் அவனுடைய வாழ்க்கையில் இதுகாறும் இடம் பெற்று வந்திருக்கிறது.

இனி மனிதன் துறக்கவேண்டியதை இப்பொழுது ஆராய்வோம். ஐம்பொறிகள் வாயிலாகத் தன் அறிவைக் கொண்டு மனிதன் புற உலகைப் புலப்படுத்துகிறான். ஐம் பொறிகள் இல்லாவிட்டால் புற உலகைப் பற்றிய ஞானம் அவனுக்குக் குறைபட்டுப்போம். ஆனால் அவைகளின் வாயிலாகவே தன் அறிவுக்கு ஏற்ப புற உலகம் அவனுக்கு வெவ்வேறு பாங்குகளில் புலனாகிறது. நல்லறிவு படைத் திருப்பவனுக்குப் புறவுலகம் நலம் நிறைந்ததாகக் காட்சி கொடுக்கிறது. அறிவு குன்றியவனுக்கு அல்லது அறிவு திரிவுபட்டவனுக்குப் புற உலகம் கேடு நிறைந்ததாகக் காட்சி கொடுக்கிறது. பொதுவாக மக்கள் எல்லாருக்கும் பிரபஞ்சம் நலம், கேடு ஆகிய இரண்டு இயல்புகள் வாய்க்கப் பெற்றதாக விளங்கி வருகிறது. ஐம்பொறிகள் மூலமாக மனிதன் புறவுலகினின்று இன்பம் துய்த்து வருகின்றான். இன்பத்தை நாடியே ஐம்பொறிகளை அவன் பயன்படுத்தி

வருகிறான். இன்பம் துய்ப்பதற்காகவே அவன் உயிர் வாழ்ந் திருக்கிறான். ஜன்மங்கள் பல எடுத்து அவன் செய்து வருகிற முயற்சிகள் யாவும் இயற்கையினூடிருந்து மேலும் மேலும் இன்பத்தைப் பெறுதல் பொருட்டேயாம். இப்படிப் பல ஜன்மாந்தரங்களில் முயன்றான பிறகு அவனுக்குப் பேருண்மை ஒன்று விளங்குகிறது. பஞ்சேந்திரியங்கள் மூலமாகப் புலனாகின்ற பிரபஞ்சம் தனக்கு அரைகுறையான காட்சிகளையே நல்கி வந்திருக்கிறது. பஞ்சேந்திரியங்கள் மூலமாகத் தான் நாடி வந்துள்ள இன்பங்கள் யாவும் இறுதி யில் துன்பங்களாக மாறியமைகின்றன. நிரந்தர வாழ்வை மனிதன் இவ்வுலகில் தேடுகிறான். ஆனால் சாவு அவனுக்கு சன்மானமாகக் கிடைக்கிறது. விதவிதமான இன்பங்களை இயற்கையினின்று பிரித்தெடுக்க அவன் படாதபாடு படு கிறான். இன்பம் என அவன் தேடி எடுத்தது கைக்குக் கிட்டியதும் துன்பமாக மாறிப்போகிறது. இப்படி அவனுக்கு ஏமாற்றத்துக்கு மேல் ஏமாற்றம் பிரபஞ்ச வாழ்வில் வந்து கொண்டேயிருக்கிறது. பல பிறவிகளில் ஆராய்ச்சி செய்து பார்த்தான பிறகு ஐம்பொறிகள் வாயிலாக நிலைத்த இன் பத்தைப் பெறமுடியாது, ஐம்பொறிகள் வாயிலாக நித்திய வாழ்வைப் பெறமுடியாது என்னும் உண்மை மனிதனுடைய உள்ளத்தில் உதிக்கிறது. அவ்வுண்மை அவனுடைய உள்ளத்தில் உறுதிபெறுகிற அளவு ஐம்பொறிகளிலே அவன் கொண்டுள்ள நாட்டத்தைத் துறக்கிறான்.

முறையாகச் சந்நியாச ஆச்ரமம் புகுகிற ஒருவன் மிகக் கடினமான விரதம் ஒன்றை எடுத்துக்கொள்கிறான். பூலோ கத்தை நான் துறக்கிறேன்; புவர் லோகத்தை நான் துறக்கிறேன்; சுவர் லோகத்தை நான் துறக்கிறேன் — என்பது அவன் எடுத்துக்கொள்ளும் விரதமாகும்.

இந்த அரிய விரதத்தில் பூலோகத்துக்குக் கீழே இருக்கிற பாதாளலோகம் முதலியன ஏன் சேர்த்துக்கொள்ளப்பட வில்லை என்னும் கேள்வி எழக்கூடும். ஆனால் படிப்படியாக மானுட நிலைக்குப் பரிணமித்து வந்துள்ள ஜீவன் அக்ஞான பூமிகளாக இருக்கின்ற பாதாளலோகங்களை ஏற்கனவே துறந்தாய்விட்டது. துறந்துவிட்டதை மீண்டும் துறக்கிறேன் என்று பிரதிக்ஞை பண்ணிக்கொள்வதில் பொருள் இல்லை. மனிதன் இப்பொழுது பெற்றுள்ள பூலோக வாழ்க்கையில் பெரும்பற்று வைத்திருக்கிறான். இதிலும் உயர்ந்ததாக அவன் அறிவுக்கு எட்டுகிற புவர்லோகம், சுவர்லோகம் என் பனவற்றைப் பெற அவன் அவாவுறுகிறான். அவன் மனதில் கற்பனை பண்ணிக்கொண்டிருக்கும் விண்ணுலகம் அல்லது சொர்க்கத்தில் துன்பம் கலவாத இன்பம் நிறைந்திருக்கிறது என அவன் எண்ணிக்கொள்கிறான். மரணமிலாப் பெரு வாழ்வு சுவர்க்கத்தில் இருப்பதாக அவன் சொப்பனம் காண் கிறான். ஆனால் அவைகளையெல்லாம் அவன் தனது விவேகத் தைக்கொண்டு விசாரித்துப் பார்ப்பானாகில் சுவர்க்கபோக மும் ஐம்பொறிகளால் நுகரப்படுவது என அவனுக்கு விளங்குகிறது. ஐம்பொறிகளால் நுகரப்படுவது எதுவுமே நிலைத்ததாக இருக்கமுடியாது. ஐம்பொறிகள் தாமே நிலை யற்றவைகள். அவைகள் தேய்ந்துபோகின்றன; அழிந்து பட்டுப் போய்விடுகின்றன. அழியும் தன்மையுடைய கருவி களைக்கொண்டு அழியாதது எதையுமே மனிதன் பெறமுடி யாது. தன்னுடைய தினசரி வாழ்வில் மனிதன் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் என்பனவற்றை ஒரு விதத்தில் துய்த்து வருகிறான். விழித்திருந்து வியவகாரங்கள் பண் ணுவதெல்லாம் வையக வாழ்வுக்கு உரியவைகளாம். எனவே ஜாக்ரதாவஸ்தையில் பெற்று வருவதையெல்லாம் பூலோக

வாழ்வு எனலாம். பின்பு படுத்துறங்கும்பொழுது மனிதன் கனவு காண்கிறான். அதில் அவனுடைய அவாக்கள் நிறைவேறுவதுண்டு; தடைப்பட்டுப் போய்விடுவதுமுண்டு. எனவே அது புவர்லோகத்துக்கு நிகரானது. சொப்பனாவஸ்தையில் மனிதன் புவர்லோகத்திலிருக்கிறான். இனி, கனவற்ற அயர்ந்த உறக்கத்தைச் சிறிது நேரத்துக்காவது மனிதன் அனுபவிக்கிறான். கனவற்ற அயர்ந்த உறக்கம் ஆனந்தம் நிறைந்தது. அதில் யாருமே எவ்விதத் துன்பத்தையும் துய்ப்பதில்லை. துன்பம் கலவாத இன்பம் என்று அதைச்சொல்லலாம். சொர்க்க வாழ்வுக்கு அது நிகரானது. எனவே சுஷுப்தி அவஸ்தையில் மனிதன் ஒருவித சொர்க்க வாசம் பண்ணுகிறான். ஆனால் இப்படி அவன் நாள்தோறும் துய்த்து வரும் பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் அவனுக்கு நிரந்தர நலனைத் தருவதில்லை. இம் மூன்றனுள் ஒன்று மற்ற இரண்டையும் தகர்த்துத் தள்ளுகிறது. பரஸ்பரம் ஒன்றையொன்று ஒழித்து வருகிற நிலைகளை நித்தியமானவைகள் என்று எண்ணி மனிதன் ஏமாற்றம் அடைந்து போகலாகாது. எனவே சந்நியாசி ஒருவன் ஜாக்கிரத, சொப்பன, சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளில் பற்றை ஒழிக்கிறான். பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய ஞானபூமிகளில் பற்றை ஒழிக்கிறான்; பஞ்சேந்திரியங்களில் பற்றை ஒழிக்கிறான். பஞ்சேந்திரிய வாழ்வுக்கு மேலானது ஏதேனும் இருக்கிறதா என்று அவன் விசாரித்துப் பார்க்கிறான்.

பொருத்தமான சாஸ்திரப் பிரமாணங்கள் இரண்டை ஈண்டு எடுத்துக்கொள்வது அவசியமாகிறது.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

तां योगमिति मन्यन्ते स्थिरामिन्द्रियधारणाम् ।
अप्रमत्तस्तदा भवति योगो हि प्रभवाप्ययौ ॥

தாம் யோகமிதி மன்யந்தே ஸ்திராமிந்த்ரியதாரணும்
அப்ரமத்தஸ்ததா பவதி யோகோ ஹி ப்ரபவாப்யயௌ

*பொறிகளை முற்றிலும் அடக்குவது யோகம். அதனுல் ஞானத்தெளிவு உண்டாகிறது. புலனடக்கத்தால் யோகம் வாய்க்கிறது; அடங்காமையால் அது வழுவுகிறது.*

*ஐம்பொறிகள் மூலமாக நுகரும் சுகங்களை அறவே விட்டொழிப்பது சந்நியாசமாகும். இவ் ஐந்தும் அறுபட்டுப் போனவிடத்து பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம் ஆகிய மூவுலகும் துறக்கப்படுவனவாகின்றன. நாவால் அறுசுவைகளைச் சுவைப்பதற்கு உயிர்கள் அனைத்தும் பேரவாக்கொள்கின்றன. சுவைத்து உணவுவகைகளை உண்பதால் மனிதனைப் பிடித்துள்ள நோய் அதிகரிக்கிறது. என்ருலும் நோயைப் பொருட்படுத்தாது நாவுக்கினியதை அருந்த நோயாளி ஒருவன் அவாவுறுகிருன். உணவில் வைத்துள்ள பற்றுதல் ஒழிந்துபட்டுப்போன பிறகு இருப்பதும் இறப்பதும் ஒன்றே என அவன் கருதுகிருன். நாவை வென்று போனதற்கு நிகராக்கும்படி நூல்களில் ஆணை பிறந்திருக்கிறது. ஊனை வெறுப்பது உயிரை வெறுப்பதற்கு ஒப்பாகிறது. உயிரை வெறுக்க யார்தான் துணிவர்? ஐம்பொறிகளுள் நாவுக்கு நிகரான இடம் பெற்றிருப்பது ஊறு அல்லது ஸ்பரிசம். இந்த ஸ்பரிச இந்திரியம் உடலெங்கும் வியாபித்திருக்கிறது. வெப்பம் தணுப்பு, மிருதுவாயிருப்பது கடினமாயிருப்பது ஆகிய உணர்வுகளை உடலில் எப்பகுதியைக் கொண்டாகிலும் மனிதன் அறிந்துகொள்கிருன்.*

இனி, இந்த ஊறு உணர்ச்சி உயிர்களின் ஆண் பெண் குறி களிலே சிறப்பாக இடம் பெற்றிருக்கிறது. காம நுகர்ச்சி என்பது ஸ்பரிசத்தை அடிப்படையாகக் கொண்டது. உயிர் கள் அனைத்தும் உயிர் வாழ்ந்திருப்பது ஆண் பெண் பால் வேற்றுமையில் வளர்ந்து வருகின்ற காமத்தை நிறைவேற்றிக் கொள்ளுதற் பொருட்டேயாம். இந்த ஓர் ஆசையைப் பூர்த்தி பண்ணுவதற்கு சிற்றுயிர்களும் பேருயிர்களும் எத்தனை எத்தனை சிரமப்பட்டு வருகின்றன என்பதைப் பிரபஞ்சம் முழுதிலும் கண்கூடாக நாம் காணலாம். காமத்தைக் காய்வதும், வாழாது ஒழிந்துபட்டுப் போவதும் காமநோய் பிடித்திருப்பவர்களுக்கு ஒன்றேயாம். ஆனால் காமத்தை அறவே துறப்பது சந்நியாசமென்றால் யார்தான் விரும்பப் படாத அச்செயலைப் புரியத் துணிந்து முன்வருவர்? காமத்தைத் துற எனக் கட்டளையிடுவது செத்துப்போ எனக் கட்டளையிடுவதற்கு ஒப்பாகிறது. இனி ஐம்பொறி களுள் சுவை, ஊறு ஆகிய இரண்டும் முக்கிய இடம் பெற்றி ருக்கின்றன எனினும் அவ்விரண்டையும் தொடர்ந்து ஒளி, ஓசை, நாற்றம் ஆகிய மூன்றிலும் பற்றைவிடுவது துறவற மாம். பல பிறவிகளில் கடுந்தவம் புரிந்துபெற்ற ஐம்பொறி களை அறவே அடக்குதல் அல்லது அவித்துவிடுதல் தற் கொலை பண்ணிக்கொள்வதற்கு நிகராகிறது. பெறுதற்கரிய வாய்ப்புகளாகிய ஐம்பொறிகளை அவித்துவிட்டால் எஞ்சி யிருப்பது ஒன்றுமில்லை. ஆதலால்தான் ஐம்பொறிகளைச் சந்நியாசம் பண்ணுவது செத்தொழிந்து போவதற்கு நிகரா கிறது. ஆனால் அவ்வைந்தையும் அடக்கியவனே மகாயோகி என்றும் நீடு வாழ்பவன் என்றும் மறைமொழிகள் முரசறை கின்றன.

இனி, மற்றொரு விதத்தில் இந்தச் சிறந்த செய்தி விவேகி ஒருவனுக்கு ஞாபகம் ஊட்டப்படுகிறது. காதை

நம்பி ஓசை என்னும் பொறியில் கருத்தைச் செலுத்தி மான், வேடன் கையில் அகப்பட்டு உயிரைப் பறிகொடுக்கிறது. யானை ஊறு அல்லது ஸ்பரிச உணர்ச்சியில் பற்று வைத்து மக்களுக்கு அடிமையாகிறது. விட்டில் பூச்சி கண்ணை நம்பி ஒளியில் பற்றுவைத்து தீயில் விழுந்து மடிகிறது. மீன் சுவையில் பற்றுவைத்து நாவை நம்பித் தூண்டிலில் அகப்பட்டு மாய்கிறது. கருவண்டு மோப்பத்தில் பற்றுவைத்து மலரினுள் சென்று அதனுள் அகப்பட்டு அழிந்துபட்டுப் போகிறது. ஏதேனும் ஓர் இந்திரியத்துக்கு அடிமைப்பட்டு இவ்வுயிர்களில் ஒவ்வொன்றும் அழிந்து பட்டுப்போக வேண்டியதாயிற்று. ஐம்பொறிகளிலும் பற்றுவைத்து ஐந்திலும் மூழ்கிக்கிடக்கும் மனிதனுடைய கதி என்ன ஆவது? இக்கருத்துக்கள் அடங்கிய சுலோகம் இதுவாம்:

शब्दादिभिः पञ्चभिरेव पञ्च पञ्चत्वमापुः स्वगुणेन बद्धाः ।
कुरङ्गमातङ्गपतङ्गमीनभृङ्गा नरः पञ्चभिरञ्चितः किम् ॥

சப்தாதிபி: பஞ்சபிரேவ பஞ்ச பஞ்சத்வமாபு:
ஸ்வகுணேன பத்தா:
குரங்க மாதங்க பதங்க மீன ப்ருங்கா நர:
பஞ்சபிரஞ்சித: கிம்

வாழ்வின் போக்கைத் துருவி ஆராய்ந்து பார்க்க மனிதன் கடமைப்பட்டிருக்கிறான். முறையாக விசாரித்துப் பார்ப்பவர்களுக்கு உண்மை ஒன்று விளங்கும். உயிர் வாழ்ந்திருப்பது தீபம் எரிவதற்கு நிகரானது. எண்ணெய்க்கு நஷ்டமில்லாது தீபம் எரிவதில்லை. அதே முறையில் உயிர்க்கு நஷ்டமில்லாது பஞ்சேந்திரியங்களில் சுகித்திருத்தல் என்பதில்லை. வாழ விரும்பும் மனிதன் ஐம்பொறிகள் மூல

மாகத் தன் உயிரைப் பலிகொடுத்து வாழ்ந்து வருகின்றான். இப்படி அழிந்துபட்டுப் போவதினின்று தப்பித்துக் கொள்ளுதற்கு வழி இல்லையா என்னும் கேள்வி பிறந்தது. ஐம்பொறிகளை வெல்லுதல் ஒன்றே பெருவாழ்வுக்கு உற்ற உபாயம் என்னும் நியமனம் தோன்றுவதாயிற்று. அவைகளை வெல்லுதலின் உட்பொருளை அறிந்துகொள்ளுதல் அவசிய மாகிறது. அதற்கு சந்நியாசம் என்னும் சொல்லில் உள்ள உடன்பாட்டுக் கருத்தையும் அறிந்துகொள்ளுதல் அவசிய மாகிறது. நியாசம் என்னும் சொல் இறை வழிபாட்டில் கையாளப்படுகிறது. கர நியாசம், அங்க நியாசம் என்பன பூஜா விதியில் அடங்கியிருக்கின்றன. கரத்தைக் கடவுள் வழிபாட்டுக்கென்றே ஒப்படைத்து வைப்பது கர நியாசம். அங்கங்களை ஈசன் ஆராதனைக்கென்றே ஒப்படைத்து வைப் பது அங்க நியாசம். அக்கோட்பாட்டின்படி ஆத்ம சாதகன் ஒருவன் தனது உயிர்வாழ்வு முழுவதையும் ஈசுவர ஆராத னைக் கென்றே கொடுத்துவைப்பானாகில் அது நியாசங்களுள் சம்நியாசம் ஆகிறது. இக்கருத்தின்படி சந்நியாசம் என்றால் முற்றிலும் தன்னைப் பரம்பொருளுக்கென்றே ஒப்படைத்து வைப்பதாம். வாழ்வின் குறிக்கோளை இப்படி மாற்றி அமைத் துக்கொள்வது சந்நியாசமாகிறது. இந்தச் சீரிய இலட்சி யத்தைக் கடைப்பிடிப்பவன் ஐம்பொறிகளைப் பாழ்படுத்த வேண்டியதில்லை. அவை யாவையும் அவன் சம் நியாசம் பண்ணுகிறான். ஆங்கிலத்தில் total sublimation என இது பொருள்படுகிறது. உயர்ந்த இலட்சியத்துக்காகத் தனது ஆற்றல், அமைப்பு முழுவதையும்கொடுத்துவிடுவது என்பது இதன் கருத்து. இச்சீரிய இலட்சியத்துக்கு ஒப்பவாழ்கின்ற வன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐந்தையும் தேவாராதனைக்கெனப் பயன்படுத்துகிறான். ஐம்பொறிகளை

ஈசுவர உபாசனேயில் பயன்படுத்துவது அவைகளேச் சுட்டறுப்பதற்கு ஒப்பாகிறது. நாவைக்கொண்டு மீன் உணவை நாடுவதுபோன்று சந்நியாசி உணவை நாடுவதில்லே. ஹோமாக்னியில் பக்தி சிரத்தையுடன் நெய்யைச்சொரிவது போன்று தன் உடலில் வைசுவானர அக்னி சொரூபமாயிருக்கும் பரம்பொருளுக்கு ஹவிஸ் ஆக அவன் உணவைப்படைக்கின்ருன். 'போக்தாவாக இருந்து நான் உணவை உண்கிறேன்' என்னும் உணர்ச்சி சந்நியாசிக்கு இல்லே. உண்ணுதல் என்னும் வேள்வியின் மூலம் உடலினுள்ளிருக்கும் உறுபொருள் ஆராதிக்கப்படுகிறது என்னும் உணர்வில் அவன் நிலே நிற்கிருன். கண்ணுக்குப் புலப்படுவனவெல்லாம் கடவுளின் பல்வேறு தோற்றங்கள் எனச் சந்நியாசி கருதுகிருன். மற்றவர்களுக்கு நலம் கேடு மயமாக இருக்கும் பிரபஞ்சம் சந்நியாசி ஒருவனுடைய கண்ணுக்குக் கடவுள் சொரூபமாகக் காட்சிகொடுக்கிறது. ஆக, கண்ணே அவன் பயன்படுத்தும் முறை வேறு; உலகத்தவர் பயன்படுத்தும் முறை வேறு. உடல் வாழ்ந்திருக்கும்பொழுதே அதை நடமாடும் பிணமாக சந்நியாசி கருதுகிருன். ஆதலால் சீதம், உஷ்ணம் முதலிய ஸ்பரிசங்களே அவன் மனதில் ஏற்றுக்கொள்வதில்லே. பிணமாகக் கருதப்படுகிற உடலினிடத்துக் காம நுகர்ச்சிக்கு இடமில்லே. சந்நியாசியின் காதில்படுகிற ஓசைகளெல்லாம் நாதபிரம்மத்தின் பல பிரிவுகளாம். உடல் வாழ்க்கையை அவன் பொருட்படுத்தாமையினுல் சுகந்தம் துர்க்கந்தம் என்கின்ற நாற்றத்தையும் அவன் கருத்தில் வாங்கிக்கொள்வதில்லே. ஐம்பொறிகளே ஈசுவர ஆராதனேக்கென்றே ஒப்படைத்து வைப்பது சந்நியாசம்.

## மரண உபாசனே

உலகிலுள்ள உயிர்கள் எத்தனே எத்தனேயோ இனங்களாகப் பிரிந்திருக்கின்றன. அவைகளுக்கு இடையில்

யாண்டும் வேற்றுமையையே காண்கிரேம். ஓர் இனம் போன்று மற்ரேர் இனம் இருப்பதில்லே. அதுமட்டுமல்ல, ஓர் உயிர்போன்று மற்ரேர் உயிர் இருப்பதில்லே.உயிர் வகைகள் எண்ணிக்கையில் அடங்காதிருப்பது போன்று அவைகளுக் கிடையிலுள்ள வேற்றுமையும் அளவையில் அடங்காது. அப்படியாளுல் அவைகளுக்கிடையில் எவ்வித ஒற்றுமையும் இல்லேயா என்பது கேள்வி. ஆம், உயிர்களுள் ஒற்றுமையும் ஒன்று உளது. அது மறுக்க முடியாத ஒற்றுமை. சொல்லி வைத்தாற்போன்று உயிர்கள் அனேத்தும் அனுஷ்டிக்கும் ஒற்றுமையாம் அது. தத்தம் உயிரைப் பாதுகாப்பதில் ஒவ்வோர் உயிரும் ஊக்கம் கொண்டிருக்கிறது. தான் அழிந்துபட்டுப் போவதில் எவ்வுயிர்க்கும் சம்மதம் இல்லே. தாம் சாசுவதமாக வாழ்ந்திருக்க வேண்டும் என்றே ஜீவ கோடிகள் அனேத்தும் முயன்று வருகின்றன. அவைகளுக் கிடையில் நிகழ்கின்ற எண்ணிறந்த செயல்களெல்லாம் எதை முன்னிட்டு என்று ஆராய்ந்து பார்த்தால் அதிசயம் ஒன்று வெளியாகும். உயிரைப் பேணுதற்கே அவையாவும் முயன்று வருகின்றன. அப்பெரு முயற்சியை மேலும் துருவி ஆராய்ந்து பார்த்தால் மற்ரேர் உண்மை வெளியாகும். ஒன்றையொன்று தாக்காது, ஒன்றையொன்று புறக்கணிக் காது எவ்வுயிரும் வாழ்ந்திருக்க முடியாது. எண்ணெயை ஈடாகச் செலுத்திளுல் மட்டும் தீபம் எரிகிறது. அங்ஙனம் உலகிலே ஓர் உயிர் நிலேத்திருத்தற்பொருட்டு மற்ற உயிர் களே அது நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தாக்குகிறது. வாழ்வு என்பது ஒரு பெரும் போராட்டம். தான் வாழ்ந்திருத்தல் பொருட்டு மற்ற உயிர்களேத் தயங் காது தாக்கியாக வேண்டும். மண்ணிலுள்ள பேக்டீரியா என்னும் சிற்றுயிர்களே ஏற்று உண்டு தாவரங்கள் உயிர்

வாழ்கின்றன. தாவரங்களைப் புசித்து நடப்பன, பறப்பன உயிர் வாழ்கின்றன. இவை யாவையும் புசித்து மனிதன் உயிர்வாழ்கிருன். வாழ்ந்திருத்தல் என்னும் படக்காட்சியைத் திருப்பிப் பார்த்தால் பின்புறத்தில் அது கொடுக்கிற காட்சி மற்ருெரு விதமானது. உயிரை உயிர் மாய்த்து வருகிறது என்பதுவே பின் புறத்தில் நாம் காணும் காட்சியாகும். ஆகவே, வாழ்வில் விருப்பம் என்னும் இயற்கைச் செயல் மற்ற உயிர்களை மாய்த்தல் என்னும் செயலாக வடிவெடுக்கிறது. வாழ்வும் மாய்வும் இணைபிரியாதவைகளாம். மற்றவைகளை மாய்த்துத் தான் வாழ்ந்திருக்க ஒவ்வோர் உயிரும் விரும்புகிறது. இப்படி வாழ்ந்திருப்பதில் கொண்டுள்ள விருப்பம் உயிர்கள் அனைத்துக்கும் பொதுவாம்.

ஒன்றையொன்று கொன்று தின்று உயிர்கள் வாழ்ந்திருப்பதால் கொலையுண்பதினின்று தப்பித்துக்கொள்ள எவ்வுயிர்க்கும் இயலுவதில்லை. சாவு என்னும் தடுக்க முடியாத செயலை ஒத்திவைப்பதையே வாழ்வு என்று சொல்லுகிறோம். மனிதன் ஒருவன் பல ஆண்டுகளாக வாழ்ந்திருக்கிருன் என்பதன் பொருள் பல ஆண்டுகளாக அவன் மரணத்தை ஒத்திப்போட்டு வைத்திருக்கிருன் என்பதாகிறது. இறுதியில் அவனும் மரணத்துக்கு உட்பட்டே ஆக வேண்டும். ஆனால் உயிர் வாஞ்சை மரண வாஞ்சையாக மாறுவதில்லை. மரணம் என்ருல் அஞ்சுதலே உயிர்களின் இயல்பு. அனுபவித்துள்ள ஒன்றைக் குறித்து அச்சம் வருவது முறை. தீயில் கையை வைத்தால் அது காந்திப் போகிறது. ஒருதடவை அதை அனுபவித்தான பிறகு மறுதடவை தீயில் கை வைக்க அஞ்சுவது இயல்பு. ஆக, அது போன்று அச்சங்கள் யாவும் அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன. உலகிலுள்ள உயிர்கள் அனைத்

தும் மரணத்துக்கு அஞ்சுகின்றனவென்றால் அதற்குரிய அனுபவம் இத்தனை உயிர்களுக்கும் எங்கிருந்து வந்தது? சிறு மீன்களை இரையாக்குவதற்குப் பெருமீன்கள் பாய்ந்து வரும் பொழுது சிறுமீன்கள் அஞ்சி ஓடுகின்றன. மரணத்தைப் பற்றிய பயத்தை அவைகளுக்கு யார் புகட்டியது? அந்த அனுபவம் எப்பொழுது எந்தச் சூழ்நிலையில் உண்டாயிற்று? கோழிக்குஞ்சுகள் பொரித்தவுடனே தாயின் துணையை நாடி நிற்கின்றன. பருந்து பறந்து வந்தால் குஞ்சுகள் பறந்தோடி தாயின் சிறகுகளுக்குக் கீழ் சரண் புகுகின்றன. மரணத்தைப் பற்றிய அச்சம் அவைகளுக்கு எப்படி வந்தது? நாய்க் குட்டி ஒன்று பாம்பைப் பார்த்ததும் பயந்து பின்வாங்குகிறது. சிங்கம், புலி போன்ற துஷ்ட மிருகங்களின் உயிரில்லா வடிவங்களைப் பார்த்த மாத்திரத்தில் ஆடுமாடுகள் அஞ்சிப் பின்வாங்குகின்றன. உயிருக்கு ஆபத்து என்றால் மனிதனுக்கு வருகின்ற அச்சத்துக்கு அளவில்லை. மரண பயம் இத்தனை உயிர்களுக்கும் எங்கிருந்து எப்படி உண்டாயிற்று? உயிர் வாழ்க்கையில் பற்றுதல் ஜீவர்கள் அனைத்துக்கும் பொதுவென்றால் மரணத்தைக் குறித்து அஞ்சுவதும் ஜீவர்கள் அனைத்துக்கும் பொதுவானதாம்.

உயிர்களின் இயல்பை இப்படி ஆராய்ந்து பார்க்கையில் உண்மை ஒன்று விளங்குகிறது. வாழ்ந்திருத்தல் என்னும் செயல் ஒரு பிறவியில் தொடங்குவது அல்ல. அந்தச் செயல் ஒரு மரணத்தோடு முற்றுப்பெறுவதுமல்ல. ஜனனமும் மரணமும் உயிர்களுக்கு மாறி மாறி வந்து கொண்டேயிருக்கின்றன. அவ்விரண்டு நிகழ்ச்சிகளுள் உயிர்கள் யாவும் பிறந்து வாழ்ந்திருப்பதில் விருப்பம் கொள்கின்றன. இறந்து மறைந்து போவதில் அவைகளுக்கு விருப்பம் இல்லை. விருப்பமில்லாத மரணத்தை அவைகள் முன்பு எத்தனையோ

தடவை அனுபவித்திருக்கின்றன. ஆதலால் மரணத்தைப் பற்றிய அச்சம் இயல்பாக அவைகளுள் ஊறியிருக்கிறது. உயிர்கள் சிறு நிலையினின்று பெருநிலைக்குப் பரிணமித்துப் போவதற்கு வாழ்வு பயன்படுவது போன்று மாய்வும் பயன் படுகிறது. எடுத்துள்ள சரீரம் ஒன்று மாண்டு போனால்தான் அதிலும் நல்லதொரு சரீரத்தை அந்த ஜீவன் எடுக்கமுடியும். முன்னேற்றத்துக்கு ஜனன மரணம் இரண்டும் முற்றிலும் தேவை. ஆனால் ஜீவர்கள் மரணத்தை வேண்டாம் என்று ஒதுக்கி வைக்க முயலுகின்றன. அப்படி முயன்றாலும் மரணத்தினின்று தப்பித்துக்கொள்ள அவைகளுக்கு இயலு வதில்லை.

முன்னேற்றமனைத்தும் வாழ்ந்திருப்பதனால்தானா அமைந் திருக்கிறது என்பது கேள்வி. ஏதேனும் ஒரு விதத்தில் வாழ்வை நீட்டிக்கொண்டு போவதால் முன்னேற்றம் அமை கிறதா என்று ஆராய்ந்து பார்க்கவேண்டும். வாழ்ந்திருக்க விருப்பம் கொள்வது போன்று, அவசியம் ஏற்படும்பொழுது உயிரைக் கொடுக்கவும் ஆயத்தமாயிருக்கும் உயிர்களுக்கே பாதுகாப்பும் நீண்ட வாழ்வும் வாய்க்கின்றன. ஒரு மனிதன் செல்வத்தைச் சேகரிப்பதற்குப் படாதபாடு படும்பொழுது அவன் உயிரைக் கொடுத்துக்கொண்டு பாடுபடுகிறான் என் கிறோம். செல்வத்துக்காகவென்று உயிரைக் கொடுக்க ஆயத்தமாயிருப்பவனுக்கே செல்வம் சேர்கிறது. கல்விக் காகவென்று உயிர்வாழ்க்கையை ஒப்படைக்கின்றவனுக்கே கல்வி வாய்க்கிறது. நாட்டைப்பற்றப் பிறர் படையெடுத்து வரும்பொழுது பாதுகாப்பில் ஏராளமாக உயிரைப் பலி கொடுக்கின்றவர்களே தங்கள் சமுதாயத்தின் உயிர் வாழ்க் கையையும் சுதந்திரத்தையும் பாதுகாக்கின்றனர். இயற்கை யின் செயலில் உயிர் அபகரிக்கப்படுவது போன்று தானே

வலிய உயிரைக் கொடுத்து அனுகூலமான சூழ்நிலையை உண்டுபண்ணிவிட்டால் மனிதனுக்கு மேலான வாழ்வு வாய்ப்பதில்லை. ஆக, எங்குத் திரும்பி இயற்கையின் எச்செயலை ஆராய்ந்து பார்த்தாலும் இன்னுமோர் உண்மை நமக்கு வெளியாகிறது. உயிரைக் காக்க முயலுவது ஜீவர்களிடத்துள்ள சாதாரண இயல்பு. தேவை ஏற்படும்பொழுது மனமுவந்து உயிரை வழங்க முன்வருவது அவைகளிடத்துள்ள மேலான இயல்பு ஆகும். வாழ விரும்புவது போன்று சாகவும் மனிதன் தெரிந்து கொண்டால் அவன் முன்னேற்றமடைவது திண்ணம். தான் கொண்டுள்ள லட்சியத்துக்கு உயிரைக் கொடுக்க ஆயத்தமாயிருக்கும்பொழுதே அந்த லட்சியத்தை அவன் அடையப் பெறுகிறான். ஆக, சாக வேண்டிய முறையில் சாகத் தெரிந்துகொள்வது வாழ்க்கைக்குரிய முக்கியமான பயிற்சி ஒன்று ஆகும்.

தற்கொலை செய்துகொள்கிறவர்களைப்பற்றி ஈண்டு ஒரு வார்த்தை சொல்வது அவசியமாகிறது. தற்கொலை செய்துகொள்கிறவர்கள் வாழத்தெரிந்தவர்களுமல்லர், சாகத்தெரிந்தவர்களுமல்லர். அவர்கள் பயங்கொள்ளிகள். வாழ்க்கையில் வந்துள்ள நெருக்கடிகளைச் சமாளிக்கும் உறுதிப்பாடு அவர்களிடத்து இல்லை. சோதனையை மீளமுடியாதவர்களாக மரணம் என்னும் குறுக்கு வழியை அவர்கள் நாடுகின்றனர். கணக்குப் போடத் தெரியாதவன் பலகையில் எழுதி வைத்துள்ள கணக்கையே அழித்துவிடுவதற்கு ஒப்பானது தற்கொலை. தெரியாத கணக்கை அழித்து விடுவதால் ஒருவன் கற்பது ஒன்றுமில்லை. அஞ்ஞானத்தையே அவன் வளர்க்கிறான். வாழ்வில் வரும் ஏமாற்றங்களை ஒழுங்குபடுத்துதற்கு மாறாகத் தன்னையே மாய்த்துக் கொள்பவன் மறுபிறவியில் இன்னும் கீழ்நிலையை எய்துவான். அது மட்டு

மல்ல; கிணற்றில் விழுந்து சாகமுயலுகிற ஒருவனைத் தப்பு வித்துவிட்டால் பிறகு கிணற்றண்டை அவன் காலமெல்லாம் கால் வைக்கமாட்டான். அவன் கோழையாய்ப் போகின்ருன். தற்கொலே செய்துகொள்ள முயலுகிறவர்கள் எல்லோரும் கோழைகளே. மரணத்தை ஏற்கவேண்டிய முறையில் ஏற்கத் தெரிந்துகொண்டவர்களே நன்கு வாழத் தெரிந்து கொண்டவர்களாம்.

வாழ்க்கையின் உயர்ந்த லட்சியம் ஏதேனும் ஒன்று ஒருவனுக்கு உண்டாகுமாகில் அந்த லட்சியத்தின் பொருட்டு அவன் எதை வேண்டுமானுலும் தியாகம்பண்ண ஆயத்தமாக இருக்கிருன். மரணம் வந்தால் அதை அவன் பொருட் படுத்துவதில்லே. சாவுக்கு அஞ்சாதிருக்கும் துணிவு அவ னுக்கு வருகிறது. சாவுக்கு அஞ்சாதிருப்பவனே மேலாம் லட்சியம் எதையேனும் சாதிக்க வல்லவனுகிருன். இதை எல்லாம் தொகுத்துச் சொல்லுமிடத்து மரணபயத்தை மீளுதல் முன்னேற்றத்துக்கு அறிகுறியாம். அம்முன்னேற்றம் எத்துறையில் எப்படி வேண்டுமானுலும் வந்து வாய்க்கப் பெறும். நாடியுள்ள குறியின் பொருட்டு உயிரைக் கொடுக் கவும் சித்தமாயிருப்பது மனபரிபாகத்துக்கு அறிகுறியாகும்.

மரணத்தை மகிழ்வுடன் ஏற்பவனே நல்ல துறவியாகி ருன். ஆனுல் மரணத்தை அவன் ஏற்கின்ற முறைக்கும் தற் கொலே செய்து கொள்கிறவன் அதை ஏற்கின்ற முறைக்கும் வெகுதூரமாம். வடதுருவம் எப்படி தென்துருவத்தினின்று முற்றிலும் மாறுபட்டிருக்கிறதோ அங்ஙனம் துறவி மரணத் திடம் வைக்கின்ற இணக்கமும் வாழத் தெரியாதவன் மரணத் திடம் வைக்கின்ற இணக்கமும் முற்றிலும் மாறுபட்டவை களாம். மனிதனுடைய அமைப்பிலே வாழ்ந்திருத்தல் என் பது ஒரு பகுதி; மடிந்து மறைந்து போதல் என்பது அவனு

டைய சொரூபத்தின் மற்றொரு பகுதி. இரவும் பகலும் சேர்ந்தே நாள் ஒன்று ஆவதுபோன்று வாழ்வும் மாய்வும் சேர்ந்தே மனிதனுடைய எதார்த்த அமைப்பாகிறது. பகல் எவ்வளவு பயன்படுகிறதோ அவ்வளவு பயன் இரவிலும் உண்டு. இரண்டையும் ஒரே தரத்தில் வைத்து அவைகளைப் பயன்படுத்துபவனே காலத்தை நன்கு பயன்படுத்துபவன் ஆகிறான். அங்ஙனம் ஜனனம், மரணம் ஆகிய இரண்டையும் நிகராகக் கருதி அவைகளை முறையாகப் பயன்படுத்துபவனே முழு மனிதன் ஆகிறான். அத்தகைய முழு மனிதனையே சந்நியாசி என்கிறோம்.

மரணத்தை மகிழ்வோடு ஏற்றுப் பழகுபவன் சந்நியாச ஆச்ரமத்தில் புகுபவன் ஆகிறான். மரணத்தை அவன் எங்ஙனம் ஏற்கிறான் என்பதை ஆராய்ந்து பார்ப்போம். உயிர்கள் அனைத்துக்கும் ஒரு காலம் அல்லாவிட்டால் ஒரு காலத்தில் மரணம் வருகிறது. அதைத் தவிர்க்க யாருக்கும் இயலாது. மரணம் வருகிறது என்பதை அறிந்துகொள்ளாமலேயே பலர் மடிகின்றனர்; அது வருவதை அஞ்சி வேறு சிலர் உயிர் துறக்கின்றனர். ஆனால் சந்நியாசியோ வாழ்ந்திருக்கும் பொழுதே மாய்ந்து போனவனைத் தன்னை வைத்துக்கொள்கிறான். அது எப்படி என்று பார்ப்போம். அறிவு, ஆற்றல், ஆயுள், நல்லிணக்கம் எல்லாம் வாய்க்கப் பெற்றுள்ள யுவன் ஒருவன் திடீரென்று மடிகிறான். உற்றார் உறவினர் கதறிப் பதறி அழுகின்றனர். அவர்களுடைய அழுகைக்கு அவன் செவி சாய்க்க முடியாது. அவர்களை விட்டுப் பிரிந்து போனது தான் வேண்டுமென்று செய்து கொண்டதல்ல. தடுக்க முடியாதவாறு தற்செயலாய் அது நேர்ந்துள்ளது. அந்த யுவனுடைய சரீரத்தைப் பிறகு உற்றார் உறவினர் நெடிது வீட்டினுள் வைத்திருக்கமாட்டார்கள்.

அதை வைத்திருக்கும்படி யார் வற்புறுத்தினாலும் அவ் வேண்டுதலுக்கு நெருங்கிய பந்துக்கள் இணங்க முடியாது. பிணத்தை அப்புறப்படுத்தியாக வேண்டும். இல்லையெனின் உயிர் வாழ்ந்திருப்பவர்களுக்கும் அது விபத்தை விளைவிக்கும். சந்நியாசி ஒருவன் உயிர் வாழ்ந்திருக்கும்பொழுதே வீட்டைத் துறக்கிறான்; உற்றார் உறவினரைத் துறக்கின்றான். சிசு ஒன்று தாயின் கர்ப்பத்தில் பத்து மாதம் வசித்திருந்தான பிறகு அக்கர்ப்பத்தைத் துறந்து வெளியேகுகிறது. தாய்க்கு அது எவ்வளவு வேதனையை உண்டுபண்ணினாலும் அது வெளியேகியாக வேண்டும். இல்லையேல் சிசுவுக்கும் கேடு, தாய்க்கும் கேடு. சிசு கர்ப்பத்தைத் துறப்பது போன்று சந்நியாசி உற்றார் உறவினரையும், பிறந்து வளர்ந்த சூழ்நிலையையும் துறந்துவிட்டு வேறு சூழ்நிலையை நாடிப்போகிறான். உயிரோடிருக்கும் பொழுதே செத்த பிணத்துக்கு அவன் நிகராய் மாறுகிறான். உற்றார் அழுகையைப் பிணம் உணர்வதில்லை. உற்றார் உறவினர் அழுகையைத் துறவி பொருட்படுத்துவதில்லை. ஏனென்றால் மரணத்தின்கூறு இன்னது என்பதை அறிந்து கொள்ளுதல் அவனுடைய குறிக்கோள் ஆகிறது. மரணத்தின் கூறு அதனை அறிந்துகொள்ளுதற்கு அவன் மரணத்தோடு உறவாடியாக வேண்டும். இருக்கும்பொழுதே இறந்தவனாகத் தன்னைத்தான் அவன் செய்துகொள்ள வேண்டும். இறத்தல் என்றால் என்ன என்பதை அவன் தீவிரமாக ஆராய்ச்சி பண்ணுகிறான். ஜீவித்திருக்கும்பொழுதே செத்த நிலையில் துணிந்து தன்னை வைத்துக்கொள்கிறான்.

உலகத்தவன் ஒருவன் பொருள் ஈட்டுதல்பொருட்டு உற்றார் உறவினரைப் பிரிந்து தொலைவில் உள்ள தேசங்களுக்குப் போக உறவினர் அனுமதி கொடுக்கின்றனர்.

ஆனால் மரணத்துக்குப் பிறகு மனிதனது நிலை என்ன என்று ஆராய்ந்து பார்க்கத் துறவறம் பூணுகிறவனுக்கு உலகத்தவர் மகிழ்வோடு அனுமதி கொடுப்பதில்லை. தங்களால் இயன்றவளவுக்குத் துறவறத்தில் செல்பவனுக்குத் தடை செய்வதே உலகத்தவரது இயல்பு. அப்படி அவர்கள் தடை செய்கின்றபொழுது அன்னவர்களை யமபடர்களாகக் கருது கிற மனபரிபாகம் அடையப்பெற்றவன் சந்நியாச ஆச்ரமத்துக்குத் தகுதியுடையவன் ஆகிறான். விதிவசத்தால் மாய்பவன் உலகத்தவர் அழுகைக்குச் செவி சாய்க்க இயலாதவனாய் உறங்கி மறைகிறான். பர தத்துவத்தை நாடுகிற சந்நியாசி உலகத்தவர்களுடைய கூக்குரல்களைக் கேட்டும் அதற்கெல்லாம் இளகாதவனாகத் தனது உயர்ந்த லட்சியத்தை நோக்கி வெளியேகுகிறான். அந்த அளவில் உலக வாழ்க்கையினின்று மாண்டு போனவனுக்கு அவன் நிகராகிறான். மரணத்தை உபாசிப்பதில் அவன் கையாளுகிற முதற்படி இதுவேயாம்.

சரீரத்தில் வாழ்ந்திருக்கும்பொழுதே செத்தவன் போன்று ஆவது ஆத்மசாதனங்களுள் மிகக் கடினமானது. அதை எவ்வளவுக்கெவ்வளவு ஒருவன் நன்கு அனுஷ்டிக்கின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவன் நல்ல சந்நியாசி ஆகிறான். வாழ்க்கையில் தான் வைத்துள்ள வேட்கையை அவன் அறவே துறக்கிறான். சுழற்றுகிற சக்கரத்துக்கு வேகம் கொடுப்பதை நிறுத்திவிட்டால் ஏற்கனவே அதன் கண் அமைந்துள்ள வேகத்துக்கு ஒப்ப அது சிறிது நேரம் சுழல்கிறது. பழைய வேகம் முற்றுப் பெற்றதும் சுழல்வதும் நின்றுவிடுகிறது. அதே முறையில் செத்தவன் போன்று ஆகிற சந்நியாசி ஒருவனுடைய உடல் வாழ்க்கை பிராரப்த கர்மம் இருக்கும் வரையில் நிகழ்ந்துகொண்டிருக்கிறது.

ஆனால் அந்நிகழ்ச்சிக்கு அவன் கர்த்தாவல்லன். தன் உடலைச் செத்துப்போனதாகக் கருதி அதற்கு அவன் ஆத்ம பிண்டம் போடுகிறான். அதன் பிறகு அவன் உணவு ஏற்பது அதைச் சுவைத்தல் பொருட்டு அல்ல; அதன் மூலம் உடலைப் பாது காத்து வைத்திருக்கவேண்டும் என்கின்ற அவாவை முன் னிட்டுமல்ல. உடலுக்குத் தருகிற உணவை அதன் உள் ளிருக்கும் சர்வேசுவரனுக்கு நைவேத்தியமாகக் கொடுக் கிறான். நைவேத்தியம் என்கிற முறையில் உணவு தூயதாய் இருத்தல் வேண்டும். ஆனால் அதன் சுவை எத்தகையது என்பதை சந்நியாசி கருத்தில் வாங்கிக்கொள்வதில்லை. அக்னியில் போடுகிற வஸ்துக்கள் நல்லவைகளாயிருக்க லாம்; அல்லது கெட்டவைகளாயிருக்கலாம். அவை யாவை யும் ஒரே பாங்கில் தீ தகனம் செய்கிறது. உணவு விஷயத் தில் விருப்பும் வெறுப்பும் இல்லாதிருப்பவனே நல்ல சந்நி யாசி. தன்னை உணவு உண்டவன் என்றோ உண்ணாது பட்டினி கிடப்பவன் என்றோ அவன் கருதுவதில்லை. எந்த வேளையில் எத்தகைய உணவு தனக்கு வந்து வாய்க்கிறது என்பதும் அவன் நினைவுக்கு வருவதில்லை. அவ்வுணவைப் படைப்பவர் யார் என்பதையும் அவன் எண்ணுவதில்லை. சர்வேசுவரனுடைய ஆணையால் அவனிடத்துக் கருவியாய் இருக்கும் காயத்துக்கு போஷணை நிகழ்ந்து வருகிறது என் னும் எண்ணத்தில் அவன் உறுதி பெற்றிருக்கிறான். உணவு உண்பதற்கிடையில் உடலைப் பிணமாகக் கருதி அதனிடத் துப் பற்றற்றிருப்பது செயற்கரிய செயலாம். உடல் வெப் பம், குளிருக்கு உட்படுகிறது. தேகாபிமானம் படைத்திருப்ப வனுக்குச் சில வேளைகளில் வெப்பத்தில் விருப்பம் வருகிறது. வேறு சில வேளைகளில் தட்பத்தில் சுகம் வருகிறது. எரிகிற தீயில் போட்டாலும் அல்லது உறைந்து கிடக்கிற உறைபனி

யில் போட்டாலும் பிரேதத்துக்கு உணர்ச்சியில்லை. தியாகி ஒருவன் சீதோஷ்ணத்தால் வருகிற இன்ப துன்பங்களை அதே விதத்தில் பொருட்படுத்தாதிருக்கின்றான். படுத்துறங்குவதும் விழித்திருந்து வினைகளாற்றுவதும் சரீரத்தின் கூறுகளாம். அத்தகைய செயல்கள் தம்போக்கில் நிகழ அவன் விட்டு வைக்கிறான். பழைய பிராரப்தத்துக்கு ஒப்ப அச்செயல்களெல்லாம் முறைபிறழாது நிகழ்ந்து வரும். ஆனால் அவைகளைத் தன் செயல்கள் என்று துறவி மனதில் வாங்கிக்கொள்வதில்லை. தனக்கு இருக்குமிடம் இன்னதென்று அவன் நிர்ணயிப்பதில்லை. உலர்ந்த சருகு காற்றால் தூக்கிச் செல்லப்பட்டு இங்குமங்கும் கிடப்பது போன்று வினையின் வேகம் எடுத்துச் செல்லும் இடத்துக்கு அவன் உடல் போகிறது. அல்லது பாம்பு ஒன்று தனக்கென்று வளை தோண்டிக்கொள்ளாது தற்செயலாய் வாய்த்த வளையில் சுருண்டிருப்பது போன்று எந்த இடத்தில் வேண்டுமானாலும் தன் உடல் கிடக்கும்படி சந்நியாசி அனுமதிக்கிறான். அதைக் கிடத்துதற்கு ஓரிடத்தில் வசதியான படுக்கை வாய்க்கிறது. மற்றோரிடத்தில் வசதி என்பது சிறிதேனுமில்லை. போட்ட இடத்தில் பிணம் கிடப்பது போன்று வாய்த்த இடத்தில் சரீரத்தை அவன் கிடத்துகிறான். போற்றுபவரும் தூற்றுபவரும் உலகில் யாண்டும் உளர். பிணத்தை எவ்வளவுதான் போற்றினாலும் அல்லது தூற்றினாலும் அதையெல்லாம் அது உணர்வதில்லை. அதே விதத்தில் சந்நியாசி ஒருவன் தன்னைக் குறித்து உலகத்தவர் என்ன கூறுகின்றனர் என்பதைக் கருத்தில் வாங்கிக்கொள்வதில்லை. கொட்டுகிற தேள் அல்லது பாம்பு அருகில் வரும்பொழுதும் பச்சைக் குழந்தையொன்று அவைகளைப் பொருட்படுத்தாது இருக்கிறது. தன் சரீரத்துக்கு பேராபத்து வரக்

கூடிய இடத்தில் சந்நியாசி ஒருவன் அதைக்குறித்து சஞ் சலப்படாதவனாக இருக்கிறான். பிணத்தை ஒருவன் வெட் டப்போனால் தப்பித்துக்கொள்ள அது எத்தனிப்பதில்லை. மரணம் நேரே தன் உடலை எடுத்து விழுங்க வருகிற இடத் தும் அதைப் பொருட்படுத்தாதிருப்பவன் சந்நியாசி. இங் ஙனம் உடல் உயிர் தாங்கி இருப்பதற்கிடையில் முற்றிலும் செத்துப்போனவன் போன்று இருப்பவன் பெறுதற்கரிய வேறு ஒரு பேறு பெறுகிறான். தான் கட்டிய கூட்டினுள் அடைபட்டுக் கிடக்கிற புழு அழகிய வண்ணாத்திப் பூச்சியாக வடிவெடுக்கிறது. கட்டுண்டு கிடந்தால்தான் அத்தகைய பெருநிலை அதற்கு வாய்க்கிறது. சந்நியாசி ஒருவன் அகங் காரத்தை உள்ளடக்குகிறான். ஐம்பொறிகளைச் சுட்டறுத்த வைகள் போன்று அவன் செய்து வைக்கின்றான். அதாவது ஐம்பொறிகள் மூலமாக அவன் எந்தவிதமான சுகஜீவனத்தை யும் நாடுவதில்லை. உறக்கம், விழிப்பு ஆகிய இருநிலைகளை யும் அவன் நிகராகக் கருதுகிறான். அதன் விளைவாக அவன் உடல் வாழ்வைக் கடந்து ஆத்மசொரூபமாக மாறியமை கிறான். செத்தாரைப் போன்று அவன் ஆவதன் விளைவு அதுவேயாம்.

**சந்நியாசிக்குரிய பெயர்கள்**

மரணத்தின் மூலமாகவல்லாது வாழ்வின் உட்பொருளை யாருமே முற்றிலும் அறிந்துகொள்ள முடியாது. அதை அறிந்துகொள்ளுதற்பொருட்டு மரணத்தை மகிழ்வோடு ஆராதித்து ஆராய்பவர் சந்நியாசிகள் எனப்படுகின்றனர். அப்படி அவர்கள் செய்கிற ஆராய்ச்சியில் முறைகள் பலஉள. அந்தந்த முறைக்கேற்ப அவர்களுக்குப் பெயர்களும் பலஉள. பெரும்பான்மையோர் தொண்டர்கள் எனப்படுகின்றனர். கர்மயோகிகள் என்றும் அவர்களைக் கூறலாம். கர்மம் செய்

யாது யாரும் ஒருகணப்பொழுதும் வாழ்ந்திருக்க முடியாது. கடவுளுக்கென்றே கர்மம் செய்பவர்கள் தொண்டர்கள் ஆகின்றனர். ஆருயிர்களுக்குச் செய்கின்ற அரும்பணிகளும் ஆண்டவன் பணியில் அடங்கியிருக்கின்றன. உயிர் வாழ்க்கையைப் பொருட்படுத்தாது இறைவனுக்கு அவர்கள் ஊழியம் செய்கின்றனர். மரணமே அவர்களை வந்து எதிர்க்குமிடத்தும் பணிவிடை செய்வதினின்று அவர்கள் பிறழ்ந்து போவதில்லை. பணிவிடையின் மூலமாகவே பர தத்துவத்தை அறிய அவர்கள் வல்லவர் ஆகின்றனர்.

இனி, யோகியர்கள் என்னும் ஒரு கூட்டத்தார் உளர். உள்ளம் அல்லது அந்தக்கரணங்களைக் கட்டியாளுதல் அவர்களின் தனிச் செயலாகிறது. கருவி கரணங்களை அடக்கிப் பழகுமளவு புறவுலகுக்கும் அவர்களுக்கும் தொடர்வு அறுபடுகிறது. புறவுலக வாழ்வைப் புறக்கணித்தல் இயல்பாக அவர்களுக்கு அமைகிறது. ஆபத்து வருமிடத்து ஆமைஒன்று தன் அவயவங்களையெல்லாம் இயல்பாக உள்ளே சுருக்கிக் கொள்கிறது. ஐம்பொறிகளைப் புறவுலகில் உலவவிடுமளவு தனக்கு இன்னல்கள் வருகின்றனவென்று யோகி அவை யாவையும் உள்ளே அடக்கிப் பழகுகிறான். அச்செயலையும் சந்நியாசம் என்றே சொல்லவேண்டும். இனி, யோகியர்களுள் சித்தர்கள் என்பார் ஒரு கூட்டத்தார் இருக்கின்றனர். சித்தி என்னும் சொல் பரிபக்குவமடைதல் எனப் பொருள்படுகிறது. தங்களிடத்துள்ள குறைபாடுகளையெல்லாம் அகற்றிவிட்டு நிறைமையில் நிலைத்திருப்பவர்கள் சித்தர்களாகிறார்கள். குறைகள் அனைத்தும் கருவி கரணங்களிடத்தும் அவைகள் மூலமாகப் புலப்படுத்தும் பிரபஞ்சத்திலும் இருக்கின்றன. காண்பதற்குரிய கருவிகளையும் அவைகளைக்கொண்டு காணப்படு புறவுலகையும் ஒதுக்கிவைப்பது

சித்தர்களது சந்நியாசமாகிறது. அவர்களால் முற்றிலும் அடக்கி வைக்கப்பட்டுள்ள அந்தக்கரணத்துக்கு அலாதி யான ஆற்றல்கள் வாய்க்கின்றன. நீர்மேல் நடத்தலும் நெருப்பினுள் அழிந்துபட்டுப் போகாது புகுதலும், இருக்கு மிடம் தெரியாது சூக்ஷ்மமாக மறைந்து போவதும் போன்ற சித்திகள் பல அவர்களுக்கு வாய்க்கின்றன. ஆனால் அந்த சித்திகளைப் பயன்படுத்தாது ஒதுக்கி வைப்பவர்களே நல்ல சித்தர்கள் ஆகின்றனர். அவைகளில் மயங்கியிருப்பவர்கள் பதிதர்களாகிறார்கள். மேல் நிலைக்கு வந்த பிறகும் கீழ்மை அடைதலே சித்திகளில் ஆசை வைப்பதால் அவர்களுக்கு விளையும் கேடு ஆகும். தன்னடக்கத்தால் விளையும் திறமை களையெல்லாம் துறக்கும் பொழுதே சித்தர்களும் மற்ற யோகிகளும் சிறந்த சந்நியாசிகள் ஆகிறார்கள்.

இனி, பக்தர்கள் என்பார் மற்றொரு கூட்டத்தார் இருக்கின்றனர். ஆத்மசாதகர்கள் பூணுகின்ற சந்நியாசங் களுள் பக்தர்களுக்கு வாய்க்கிற சந்நியாசமே மிக எளியது. அதில் துன்பம் என்னும் எதிர்ச்செயலுக்கு இடமில்லை. பகவானிடத்துக் கொண்டுள்ள பேரன்பு அவர்களின் சொரூபம் முழுதையும் கவர்ந்து கொள்கிறது. பேரன்பின் மூலம் அவர்கள் கடவுளுக்கு உற்றவர்கள் ஆகிறார்கள். உல கில் ஒரு சிலரிடத்துப் பற்று வைத்துப் பெரும்பாலோரைப் புறக்கணிப்பது உலகத்தவர் போக்கு. ஆனால் பகவானிடத்து பக்தி பூணுகிறவர்கள் பகவத் பக்தியில் அனைத்தையும் அடக்கி வைக்கின்றனர். எவ்வுயிரையும் அவர்கள் வெறுப்ப தில்லை. எல்லா உயிர்களிடத்தும் அவர்கள் மெய்யன்பு கொண்டிருக்கின்றனர். எல்லா உயிர்களின் நலத்தையே பக்தர்கள் நாடுகின்றனர். பகவானுக்கும் அவருடைய குழந்தைகளுக்கும் காட்டுகிற அளவுகடந்த அன்பிலே

அவர்கள் தங்களேயே மறந்து போகின்றனர். சிரமம் ஒன்று மில்லாது பேரன்புப் பெருநிலே அவர்களுக்கு வாய்க்கிறது. பேரன்பில் தங்கள் தனி வியக்தியை இழப்பது அவர்களுக்கு வாய்க்கும் சந்நியாசமாகும். துவக்கத்திலும் இடைநிலே யிலும் இறுதியிலும் இன்பமே வடிவெடுத்து இருக்கிறது பக்தர்களுக்கு வாய்க்கிற சந்நியாசம்.

உதாசீனர்கள் என்பார் ஒரு சிலர் இருக்கின்றனர். உலக நடைமுறையில் பற்று வைத்து அதில் கலந்துகொள் வதுமில்லே; அதை வெறுத்துக் கானகம் ஏகுவதுமில்லே. விளேயாட்டை உலகத்தவர் வேடிக்கை பார்ப்பது போன்று உலக வாழ்வு என்னும் விளேயாட்டை வேடிக்கை பார்த்துக் கொண்டிருப்பவர்கள் உதாசீனர்கள். உலக பந்தத்தினின்று விலகியிருப்பதால் அவர்களின் பெருநிலே சந்நியாசமெனப் படுகிறது. வைராகிகள் என்று அழைக்கப்படும் ஒரு சம்பிரதாயக்காரர்கள் உதாசீனர்களோடு சேர்க்கப்படும் இயல்புடையவர் ஆகின்றனர். பற்றற்றவர்களாய் உலகில் ஆங்காங்கு வாழ்ந்திருப்பவர்கள் வைராகிகள் ஆகிறுர்கள். படம் ஒன்றை விலேக்கு விற்பவன் அதன் அழகைக் காண்ப வன் அல்லன். அதை விலேக்கு வாங்குபவனும் அதன் அழகை ரசிப்பவன் அல்லன். வாணிகம் பண்ணுவதில் விற்பவன், வாங்குபவன் ஆகிய இருவரும் மூழ்கியிருக்கின்றனர். உதா சீனனுக இருப்பவனே படத்தின் அழகை ரசிக்கிறுன். உலக நடைமுறை என்னும் ஓவியத்தை உதாசீனனே நன்கு ரசிக் கிறுன். உலக நடைமுறையைப் பற்றிய மெய்க்காட்சி அவனுக்கே நன்கு விளங்குகிறது. எனவே சந்நியாசத்தின் பயன் யாவும் உதாசீனனுக்கு வாய்க்கிறது. இதுகாறும் இயம்பியுள்ள பெருமக்களேயெல்லாம் சந்நியாசிகள் என்றும்

துறவிகள் என்றும், நீத்தார் என்றும், தியாகிகள் என்றும், யதிகள் என்றும் பலப்பல பெயர்கள் இட்டு அழைக்கலாம்.

பின்பு சந்நியாசிகளுள் ஞானிகள் எனப் பகரப்பெறு பவர் இருக்கின்றனர். தங்கள் பகுத்தறிவைப் பயன்படுத்தி மெய்ப்பொருள் எது, பொய்ப்பொருள் எது எனப் பாகு படுத்துபவர் ஞானிகள் ஆகின்றனர். பரம்பொருள் ஒருவரே மெய்ப்பொருள். பிரபஞ்சத்திலுள்ள ஏனைய யாவும் காலத் தால் விழுங்கப்படுகிறது; இடத்தில் ஒடுங்குகிறது; வர்த்த மானத்தில் மாறியமைகிறது. அவை யாவையும் அநித்திய மானவைகள் என ஒதுக்கி வைப்பவன் சந்நியாசி. கால தேச வர்த்தமானத்தால் பாதிக்கப்படாது முற்றிலும் தன் மயமாயிருப்பது பரம்பொருள். அப்பரம்பொருளையே சார்ந் திருப்பவன் சந்நியாசி. மெய்ஞ்ஞான விளக்கு அவன் உள்ளத்தில் சுடர்விட்டு எரிந்துகொண்டிருக்கிறது. எது பிரபஞ்சமாக அஞ்ஞானிகளுக்குக் காட்சி கொடுக்கிறதோ அது பரம்பொருளாக ஞானிக்கு விளங்குகிறது.

> எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு

என்பது பொய்யாமொழி. பொருள்களைப் பலப்பலவாகப் பொருள்படுத்துவது அறியாமை. அத்தனையுமாய் இலங்கு வது பரம்பொருள் ஒன்றே என அறிவது பரஞானம். நிறை ஞானிக்கே அது வாய்க்கிறது. அஞ்ஞானத்தைத் துறந்து ஞானத்தில் நிலை நிற்பவன் சந்நியாசி.

மானுட வாழ்க்கை அநித்தியமானது. மண்ணுலகில் மனிதன் எவ்வளவு காலம் உயிர் வாழ்ந்திருப்பான் என்று

உறுதி கூறமுடியாது. ஆதலால் ஒருவனுக்கு வாழ்க்கையில் விரக்தி வாய்க்குங்கால் பாரமார்த்திகத்தை நாடி அவன் எப்பொழுது வேண்டுமானாலும் துறவறத்தை ஏற்பது உசிதம். ஆச்ரமங்களுள் தலையாய ஆச்ரமமாக இருப்பது சந்நியாச ஆச்ரமம். இந்த ஆச்ரமத்துக்குத் துரியாச்ரமம் என்பது மற்றொரு பெயர். ஜாக்கிரதம், சொப்பனம், சுஷுப்தி ஆகிய மூன்று அவஸ்தைகளுக்கும் பொதுவானதாகவும் அம் மூன்றிற்கும் அப்பாற்பட்டதாகவும் துரியம் இருப்பதால் மூன்று அவஸ்தைகளையும் துறப்பவன் துரியாச்ரமத்தைச் சேர்ந்தவன் ஆகிறான். பக்குவி ஒருவன் பூணுகிற சந்நியாச ஆச்ரமத்தில் நான்கு படித்தரங்கள் இருக்கின்றன. அந்த நான்கனுள் தலையாயது வித்வத் சந்நியாசம். கடந்துபோன பல பிறவிகளில் பக்குவம் அடைந்திருந்ததன் பயனாக ஒருவனுக்கு இப்பிறவியில் அதிவிரைவில் வைராக்கியம் வாய்க்கிறது. உலக இன்பம் எதிலும் அவனுக்கு நாட்டம் கிடையாது. பாரமார்த்திகம் ஒன்றே அவனுக்கு வாழ்க்கையின் குறிக்கோள் ஆகிறது. அப்பெருநிலையை முன்னிட்டு அவன் சந்நியாசம் பூணுகிறான். துரியாச்ரமத்துக்குத் தகுதி வாய்ந்தவன் என்பதற்கு அவனுடைய தீவிர வாழ்க்கையே சான்று ஆகிறது. முற்றிலும் பரிபக்குவம் அடைந்துள்ளவன் பூணுகிற துறவறத்துக்கு வித்வத் சந்நியாசம் என்று பெயர். அதற்கு அடுத்தபடியில் இருப்பது விவிதிஷை சந்நியாசம். தன்னிடத்தில் போதிய அளவு மனபரிபாகம் வாய்க்காவிட்டாலும் மனபரிபாகத்தையும் பாரமார்த்திகத்தையும் குறிக்கோளாக இந்த இரண்டாம் தரமான துறவி கொண்டுள்ளான். சுவானுபூதி அடையப்பெற்றுள்ள சந்நியாசி ஒருவரை அவன் சென்றடைகிறான். அப்பெருமகனிடமிருந்து அவன் சந்நியாசம் ஏற்றுக்கொள்கிறான். பிறகு சந்நியாச ஆச்ரமத்

துக்கேற்ற பெருவாழ்வு வாழ்ந்து வருகிறுன். அத்தகையவ னுடைய துறவறம் விவிதிஷை சந்நியாசம் எனப்படுகிறது. இனி, மர்க்கடக சந்நியாசம் என்பது மூன்றும் தரத்தில் உள்ளது. உற்ருர் உறவினருடைய மரணத்தை முன் னிட்டோ, வாழ்க்கையில் தான் அடைந்துள்ள தோல்வியை முன்னிட்டோ ஒருவன் துறவியாக வீட்டை விட்டு வெளியே கிளம்புகிறுன். பிறகு அவன் சந்நியாச ஆச்ரமம் பூண்டு கொள்வதும் உண்டு. ஆனுல் அந்த ஆச்ரம நெறியில் அவன் நிலைத்திருப்பான் என்று உறுதி கூறமுடியாது. வாழ்க்கை யில் புதிய பதவியோ பொருளீட்டமோ வாய்க்குமிடத்துத் துறவறத்தைத் துறந்துவிட்டு அவன் மீண்டும் உலக வாழ் வில் ஈடுபட்டுப் போவதுண்டு. ஆதுர சந்நியாசம் என்பது நான்காம் தரமானது. ஒருவன் சாகும் தறுவாயிலிருக்கும் பொழுது சந்நியாச சம்ஸ்காரம் ஏற்றுக்கொள்ள விரும்பு கிறுன். அத்தகைய சம்ஸ்காரமும் அவனுக்குச் செய்து வைக்கப்படுகிறது. ஆனுல் மாண்டுபோகாது அவன் இன் னும் கொஞ்சகாலத்துக்கு உயிர் வாழ்ந்திருக்கிறுன். அப்படி உயிர் வாழ்ந்திருக்கிறபொழுது அவன் ஏற்றுக்கொண்டுள்ள சந்நியாச சம்ஸ்காரத்தையோ அந்த ஆச்ரமத்துக்குரிய புறச் சின்னங்களையோ புறக்கணித்துத் தள்ளலாகாது. அத் தகைய நிலையில் இருப்பவன் வாழ்ந்து வருகிற வாழ்க்கை ஆதுர சந்நியாசம் எனப்படுகிறது.

சந்நியாச ஆச்ரம வாழ்க்கையில் அவரவர் அடைந்துள்ள பரிபாகத்துக்கு ஏற்ப அவர்களுடைய வாழ்க்கைமுறை மாறியமைகிறது. சந்நியாச வாழ்க்கைமுறையைத் தீவிர மாகப் பழக்கத்தில் கொண்டுவர முடியாதவன் குடீசகன் என அழைக்கப்படுகிறுன். தனக்குப் பொருத்தமான வாசஸ் தலம் ஒன்றை அவன் அமைத்துக்கொள்கிறுன். குறிப்

பிட்ட வேளைகளில் தனக்குப் பிக்ஷை ஒழுங்காக வழங்கப் படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் அவன் செய்து வைத்துக்கொள்கிறான். பிறகு சரீர சம்ரக்ஷணையைப் பற்றிக் கவலையற்றவனாக அவன் ஆத்மசாதனங்களில் ஈடுபடுகிறான். குடீசகனைவிடக் கடினமான வாழ்க்கை வாழ்பவன் பஹூதகன் என அழைக்கப்படுகிறான். வெவ்வேறு இடங்களில் நீர் அருந்துபவன் என்பது இப்பதத்தின் பொருள். அதாவது பஹூதகன் என்னும் சந்நியாசி ஓயாது இடம் மாறிப் போய்க்கொண்டேயிருக்கிறான். ஆதலால் ஆங்காங்கு அகப் படும் பலப்பல நீர்களையும் பிக்ஷான்னவகைகளையும் அவன் அருந்துபவன் ஆகிறான். பஹூதகனைவிட உயர்நிலையிலிருப் பவன் ஹம்ஸன் என அழைக்கப்படுகிறான். மனபரிபாகத் தில் இவன் மேல் நிலைக்குப் போனவன். இடம் மாறிப் போவது மனபரிபாகம் அடையாதவனுக்கும் இயலலாம். பின்பு ஓயாது இடம் மாறிப் போய்க்கொண்டிருப்பதற்கிடை யில் மனதைப் பெருநிலையிலேயே உறுதியாக வைத்துப் பழகுவது மிகக் கஷ்டமானது. அத்தகைய பயிற்சியை ஹம்ஸன் செய்து வருகிறான். இந்த ஹம்ஸனுக்கும் உயர் நிலையிலிருப்பவன் பரமஹம்ஸன்.

வேதாந்த கோட்பாடுகளுக்கு உறைவிடமாயிருந்து பரதத்துவங்களையே தன் வாழ்க்கையில் அமைத்து வைத் துள்ள சந்நியாசியைப்பரமஹம்ஸன் என வேதாந்தசாஸ்திரம் கூறுகிறது. எனவே சந்நியாசிகளின் திருக்கூட்டங்களில் பரமஹம்ஸர்கள் அலாதிச் சிறப்பும் தொன்மையும் வாய்க்கப் பெற்றவர்களாகிறார்கள். சந்நியாசிகள் அனைவரும் சீரியவர் களே. ஆயினும் அவர்களுள் பரமஹம்ஸர் என அழைக்கப் படுகிறவர்களிடத்துப் பரிபூரணம் ஒளிர்கிறது. ஹம்ஸம் என்னும் சொல் ஜீவாத்மனைக் குறிக்கிறது. பரமஹம்ஸன்

என்னும் சொல் சம்சார சாகரத்தைக் கடந்த முக்த புருஷனைக் குறிக்கிறது. ஜீவாத்மன் தனது ஜீவபோதத்தைச் சந்நியாசம் செய்து விட்டுப் பரபோதத்திலேயே திளைத்திருக்கிறான். ஆதலால் அவன் பரமஹம்ஸன் என அழைக்கப்படுகிறான். பெயரளவில் ஒரு சரீரத்தினுள் இருப்பவன் போன்று அவன் தென்படுகிறான். உண்மையில் நிழல் போன்று சரீரம் அவனைச் சார்ந்திருக்கிறது. பரமஹம்ஸன் ஒருவனைச் சரியாக அறிந்துகொள்பவனே வேதாந்தத்தை அறிபவன் ஆகிறான். பரமஹம்ஸன் ஒருவனைச் சரியாக அறிந்துகொள்பவனே பரமாத்மாவை அறிபவன் ஆகிறான். பரமஹம்ஸன் ஒருவன் தற்செயலாய் வாய்த்த ஏதேனும் ஓரிடத்திலேயே இருப்பதுண்டு; அல்லது சங்கல்பம் ஒன்றுமில்லாது இடம் மாறிப் போய்க் கொண்டிருப்பதுண்டு. சித்தன் போக்கு சிவன் போக்கு என்று அவனைக் குறித்து இயம்பலாம். அப்படி இடம் மாறிப் போய்க்கொண்டிருப்பவன் பரிவ்ராஜகப் பரமஹம்சன் என அழைக்கப்படுகிறான். அவனுக்குரிய பழமொழி மற்றொன்று உண்டு. ஓடுகிற ஆற்று நீரும் உலாவுகிற யதியும் மாசுபடிவதில்லை என்பது அப்பழமொழி. நிற்கின்ற கிணற்று நீரை இறைக்காவிட்டால் அது கெட்டுப்போம். ஓடுகிற ஆற்று நீரோ எவ்விதத்திலும் கெட்டுப் போவதில்லை. சஞ்சரிக்கின்ற பரமஹம்ஸன் ஆற்று நீருக்கு ஒப்பானவன். அவன் மூலம் அரியதொரு தெய்வச் செயல் நிகழ்கிறது. செல்லுமிடங்களிலெல்லாம் தன்னையறியாது அவன் அருளை எடுத்து வழங்குகிறான். மலர் மணம் கமழ்வது போன்று பரிவ்ராஜகப் பரமஹம்ஸன் அருளைச் சொரிகிறான். ஆங்காங்கு உள்ள மாந்தர் அவரவர் பக்குவத்துக்கு ஏற்ப அருளை அப்பரமஹம்ஸனிடமிருந்து ஏற்கின்றனர்.

## புறச் சின்னங்கள்

நான்கு ஆச்ரமங்களுக்கு அந்தந்த ஆச்ரமத்துக்குரிய புறச் சின்னங்கள் இருக்கின்றன. இப்புறச் சின்னங்களில் பெரும் பகுதி காலத்துக்கேற்றபடி மாறியமைந்து வருகின்றன. வைதிக சந்நியாச ஆச்ரமம் பூணுகிறவன் பொதுவாகச் சிகையையும் யக்ஞோபவீதத்தையும் களைந்து நீக்குகின்றான். ஆனால் சில சம்பிரதாயங்களின்படி சிகையையும் பூணூலையும் களைந்து விடாமலேயே சந்நியாச ஆச்ரமம் புகுவார் உளர். சந்நியாச ஆச்ரமத்துக்குக் காஷாய உடை இன்றியமையாததாகிறது. அது தீயின் சின்னமாய் அமைந்துள்ளது. ஞானாக்னியில் சரீர சம்பந்தமான சுகங்களையெல்லாம் சுட்டெரித்துத் தள்ளியதற்கு அறிகுறியாயிருப்பது காவியுடை. அந்தக் காவியுடையையும் பொருள்படுத்தாது திகம்பரனாகத் தேச சஞ்சாரம் செய்யும் பரமஹம்ஸர்களும் அவதூதர்களும் உளர். ஆனால் அத்தகைய பெருநிலை அடைந்துள்ள பெருமக்களைக் காண்பது அரிதிலும் அரிது. சுகப்பிரம்மம், ராமகிருஷ்ண பரமஹம்ஸரின் குரு தோத்தாபுரி, சதாசிவப் பிரம்மம் ஆகியவர்கள் சரீரத்தையும் மறந்தவர்களாய் இருந்தனர். காவியுடையணிந்து உடலை மூடிவைக்க வேண்டும் என்னும் உணர்வு அவர்களுக்கு வரவில்லை. இனி, சந்நியாசிகளுக்குள் கையிலே திரிதண்டம் தாங்கிச் சஞ்சரிப்பவர்கள் உளர். மூன்று சிறு கழிகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டிக் கையில் வைத்திருப்பவர்கள் திரிதண்டம் தாங்கியவர்கள் ஆகின்றனர். மனம் வாக்கு காயம் ஆகிய திரிகரணங்களையும் அடக்கியதற்கு அறிகுறியாகத் திரிதண்டம் அமைந்திருக்கிறது. இனி, ஏக தண்டம் கையில் தாங்கியிருப்பவர்கள் உளர். ஒற்றைக்கழி ஒன்றில் காவித்துணிக்கொடி கட்டி சந்நியாசிகள் அதைக் கையில் வைத்திருக்கின்றனர். ஞானத்

துக்குச் சின்னமாக அமைந்திருப்பது ஏகதண்டம். சந்நியாசி கள் பிக்ஷாவிருத்தியில் ஈடுபட்டிருப்பது அவரவர் மனபரி பாகத்துக்கு ஒத்ததாகும். முற்றிலும் அதீதநிலையில் இருப் பவர்கள் அஜகர விருத்தியில் ஈடுபட்டவர்கள் எனப்படு கின்றனர். அஜகரம் என்பது மலைப்பாம்பு. அது ஒரே இடத் தில் மரக்கட்டை போன்று கிடக்கிறது. ஏதேனும் ஜந்து தன் வாய்க்கு எட்டினால் மட்டும் அது அருந்துகிறது. அதே விதத்தில் ஆகாரத்தைப் பற்றி ஒரு சிந்தனையும் இல்லாது தானாக வந்து வாய்த்த பிக்ஷையை மட்டும் அருந்தும் பெரு நிலையில் இருப்பவர்கள் அஜகர விருத்தியில் இருப்பவர்கள் எனப்படுகின்றனர். அன்னவர்களுக்கு ஒருபடி கீழே இருக் கிறவர்கள் கரபாத்திர பிக்ஷாவிருத்தியாளர் எனப்படுகின் றனர். பசித்த வேளையில் தங்களையறியாது இருகரங்களும் பாத்திரம் போன்று குவிந்திருந்து தற்செயலாய்க் கிடைக்கும் பிக்ஷையை அருந்திப் பசியைத் துடைத்த பிறகு தம் போக்கில் அன்னவர் போகின்றனர். சாதாரண நிலையி லிருக்கும் சந்நியாசிகளோ நாள் ஒரு தடவை ஐந்து அல்லது ஏழு வீடுகளுக்குச் சென்று 'பிக்ஷாந்தேஹி' என்கின்றனர். நெடுநேரம் எந்த வீட்டு வாயிலிலும் அவர்கள் நிற்பதில்லை. எளிதில் வாய்க்கும் பிக்ஷையை ஏற்றுக்கொண்டு அவர்கள் போகின்றனர். இனி, உணவின் பொருட்டே அலைந்து திரிபவர்கள் உண்டு. எங்குச் சென்றால் நல்ல உணவு அகப் படும் என்பதையும் அவர்கள் விசாரித்து அறிந்திருக்கின் றனர். அத்தகையவர்கள் சந்நியாச வேஷம் பூண்டிருக்கிறார் கள் எனினும் அவர்கள் உண்மையில் வறியர்கள். யாசித்து உயிர் வாழ்ந்திருப்பது அவர்களின் குறிக்கோள். ஆனால் நெறியான சந்நியாசிகளோ சிவபெருமானை உண்மையில் பின்பற்றுபவர் ஆகின்றனர். விசுவத்துக்கே நாதனாயிருக்கும்

சிவபெருமான் பிரபஞ்சத்தில் எதையும் சொந்தம் பாராட்டாது தியாகராஜனுயிருந்து கபாலத்தில் பலியேற்று அருந்துபவராயிருக்கிறுர். அவருக்குரிய கணங்கள் ஆகின்றனர் நெறியான சந்நியாசிகள்.

விவேகானந்த சுவாமிகள் பரிவ்ராஜக பரமஹம்ஸராக இந்தியா முழுதையும் பிரதக்ஷிணம் செயதார். காஷ்மீரத்திலிருந்து கன்னியாகுமரி பரியந்தம் நாடு முழுதையும் சுற்றிப் பார்த்தார். கையில் காசு எதையும் தொடுவதில்லை என்னும் விரதத்தை அவர் அப்பொழுது பூண்டிருந்தார். தற்செயலாய் வந்து வாய்த்த பிக்ஷையை அவர் ஏற்று வந்தார். பிறகு பழைய காலத்துப் பிக்ஷாவிருத்தி இக்காலத்துக்குச் சிறிதேனும் ஒவ்வாது என்று யதி தர்மத்தையே அவர் மாற்றியமைத்துள்ளார். நல்ல ஸ்தாபனங்களில் சந்நியாசிகள் அமர்ந்துகொண்டும் சஞ்சாரம் செய்து கொண்டும் பாரமார்த்திகப் பிரச்சாரமும் ஞானசேவையும் ஏராளமாகச் செய்ய வேண்டும் என்று அவர் நியமித்துள்ளார். அப்படியில்லாவிடில் சந்நியாசிகளுடைய பேராற்றல்களெல்லாம் வெறும் சஞ்சாரத்திலும் பிக்ஷ தேடுதலிலும் வீண் விரயமாகிறது என்பது அவருடைய அனுபவம். அந்த அனுபவத்தை அடிப்படையாக வைத்துக்கொண்டே இக்காலத்துக்கேற்ற யதி தர்மத்தை அவர் அமைத்துள்ளார்.

## நீத்தவன் நன்னீர் போன்றவன்

வடிவம் மாறி மாறி அமைவது உயிர்களின் வாழ்க்கைச் செயலாகும். சூழ்நிலைகளை வெல்லுவதற்கே உயிர்கள் தங்கள் வடிவங்களை மாற்றி அமைத்துக்கொள்கின்றன. நீரினுள் ஓர் உயிர் மச்சமாகப் பிறந்திருக்கிறது. அச்சூழ்

நிலையில் சிறுமீன் பெருமீனுக்கு இரையாகிறது. அந்த ஆபத்தினின்று தப்பித்துக்கொள்ளுதற்கு அது நீரினின்று துள்ளி மேலே குதிக்கிறது; சிறகு படைத்த மீன் ஆகிறது. பிறகு சிறகுடைய பறவையாகிறது. இதுபோன்ற முயற்சிகள் எல்லா உயிர்களிடத்தும் எல்லாச் சூழ்நிலைகளிலும் இருந்து வருகின்றன. முயற்சிக்கு ஒப்ப ஓர் உயிர் கல் நிலையினின்று புல் நிலைக்கு வருகிறது. புல் நிலையினின்று படிப்படியாக ஜங்கம நிலைக்கு வருகிறது. ஜங்கமத்துள் அது மானுட நிலையை எட்டுகிறது. பிறகு அவ்வுயிர்க்குத் தேவனாய் மாறியமைவதும் பிரம்மதேவனாய் மாறியமைவதும் சாத்தியம். ஆக, புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள உயிர்களை ஜீவாத்மாக்கள் என்கின்றோம்.

உபாதியை அனுசரித்தே ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒவ்வொரு பெயர் வாய்க்கிறது. சர்க்கரையினின்று வெவ்வேறு வடிவங்களையுடைய மிட்டாய்கள் செய்யப்படுகின்றன. சர்க்கரை மூலவஸ்து. வடிவ வேறுபாட்டுக்கு ஏற்ப அது குதிரை மிட்டாய் என்றும், பசு மிட்டாய் என்றும், யானை மிட்டாய் என்றும் பெயர் பெறுகிறது. உயிர்கள் அனைத்துக்கும் ஆத்மா பொதுவானது. ஜீவாத்மன் என்னும் பெயர் வருகிறபொழுது ஒவ்வொரு ஜீவனுக்கும் ஒவ்வொரு வித உடல் அமைப்பு உண்டு. உடல் வேற்றுமையை முன்னிட்டே உயிர்கள் நீந்துவன, பறப்பன, நடப்பன எனப் பெயர்கள் பெற்றிருக்கின்றன. ஒவ்வொரு வடிவமும் அந்த ஜீவனுக்கு உரிய உபாதியாகும். உபாதியோ எண்ணத்தினின்று வருகிறது. எண்ணுகிற எண்ணத்தை முன்னிட்டோ கொள்ளுகிற உணர்வை முன்னிட்டோ ஒவ்வோர் உயிரும் தன்னை நீர்வாழும் ஜந்து என்றும், வானத்தில் பறக்கும் பறவை என்றும், நிலத்தில் நடமாடும் விலங்கு

என்றும் எண்ணிக்கொள்கிறது. இத்தனைவித உபாதிகளுள் தன்னை மானுடன் என்று எண்ணிக்கொள்ளும் உபாதி சாலச் சிறந்தது. மானுட உபாதியை எய்தும் ஜீவன் மகோன்னத நிலைக்கு வந்திருக்கிறான். மானுட உபாதிகளுள் தன்னை நல்லொழுக்கமும் நல்வாழ்வும் வாய்க்கப் பெற்றவன் என்று கருதிக்கொள்ளும் உபாதி ஒப்பற்றதாகும்.

இனி, சிறந்த மானுடனை பிறகு, அந்த மானுட உபாதியையும் நீத்தலே சந்நியாசம் எனப்படுகிறது. தன்னை உபாதிகள் அற்றவனாக்குவது சந்நியாசி ஒருவனுடைய சீரிய தர்மமாகும். அப்படி அவன் தன்னை உபாதி ரஹிதன் ஆக்கிக்கொள்ளுதற்குப் பொருத்தமான உபமானம் ஒன்றை இயற்கையினின்று எடுத்துக்கொள்வது அவசியமாகிறது. தண்ணீர் தன்னுடைய நிலையை ஓயாது மாற்றியமைத்துக் கொண்டேயிருக்கிறது. அது பெரிதும் கடல் நீராய் இருக்கிறது. பிறகு ஆவியாக மாறி மேலே போகிறது. வானத்தில் அது செம்மேகம், வெண்மேகம், கார்மேகமாக மாறியமைகிறது; பிறகு மழையாகப் பொழிகிறது; மூடுபனியாகிறது; உறைபனியாகிறது; நீர்ப்பனியாகிறது; ஆற்று நீர் ஆகிறது; சேற்றுநீர் ஆகிறது; குளத்து நீர் ஆகிறது; கிணற்று நீர் ஆகிறது. இப்படியெல்லாம் மாறியமைவது அந்த நீர் எடுத்துள்ள வெவ்வேறு உபாதிகளை முன்னிட்டேயாம். மற்றோர் உண்மை இதே நீருக்கு உரியதாகிறது. வானத்தினின்று தூய மழைநீராகப் பூமியில் விழுவது எதுவோ அது முன்பு பலதடவைகளில் விலங்குகளின் மூத்திரமாக இருந்திருக்கிறது; பறவைகளின் இரத்தமாக இருந்திருக்கிறது; மக்களின் மூத்திரமாக இருந்திருக்கிறது. அத்தகைய நிலைகளெல்லாம் அதனுடைய அசுசியான நிலைகளாம். எனினும்

மீண்டும் ஆவியாகி மேலே சென்று மழை நீராகக் கீழே வரும்பொழுது அதன் பழைய புல்லிய நிலைகளை நாம் பொருள் படுத்துவதில்லை. சரியாக மனபரிபாகம் அடைந்து சந்நியாசம் எடுத்துக்கொள்ளும் நன் மகன் ஒருவன் தூய நன்னீருக்கு ஒப்பாகிறான். முன்பு அவன் படைத்திருந்த உபாதிகளில் விஷம் நிறைந்த மரமாக இருந்திருக்கலாம்; கழுகாக இருந் திருக்கலாம்; கொடிய புலியாக இருந்திருக்கலாம்; கொலை பாதகனாக இருந்திருக்கலாம். அத்தகைய உபாதிகளையெல் லாம் அவன் முன்பே துறந்துள்ளான். இனி, அப்பழைய வரலாறுகளைக் கருத்தில் வாங்குவது அவனுக்குப் பொருந் தாது. தான் ஒழுக்கம் நிறைந்த மானுடன் என்கின்ற உபாதியையும் இப்பொழுது அவன் துறந்தாகவேண்டும். யாண்டும் தன்னை உபாதி ரஹிதனாக வைத்துக்கொள்வது சந்நியாசி ஒருவனுடைய சீரிய செயலாம்.

சாதாரண உயிர்கள் மாதாவின் உதரத்தினின்று உலகி னுள் வருவதைப் பிறப்பு என்கிறோம். இது உயிர்கள் அனைத்துக்கும் பொதுவானது. இது முதல் பிறப்பு எனப் பகரப்படுகிறது. இனி, மக்களுள் சிலர்க்கு இரண்டாம் பிறப்பு எனப்படுவது உளது. தனது வாழ்க்கையை மேலான வாழ்க்கையாக மாற்றியமைத்துக்கொள்ள எவன் ஒருவன் முயலுகிறானோ அவன் மன அமைப்பில் இரண்டாம் பிறப்பு எடுக்கிறான். அப்படிப் பிறப்பெடுத்திருப்பவனை துவிஜன் என்றும் இருபிறப்பாளன் என்றும் இயம்புகிறோம். அவன் எடுக்கிற இரண்டாம் பிறப்பு தலையாயது, இடையாயது, கடையாயது என மூன்று தரங்களில் வகைப்படுத்தப்படு கிறது. தலையாய இரண்டாம் பிறப்பு எடுப்பவன் அந்தணன், அல்லது பிராம்மணன். இடையாகிய இரண்டாம் பிறப்பு எடுப்பவன், ஆளும் தன்மை வாய்ந்தவன் அல்லது க்ஷத்திரி

யன். கடையாய இரண்டாம் பிறப்பு எடுப்பவன் வைசியன் அல்லது பொருள் ஈட்டுபவன் ஆகிறன். இப்படி இரண்டாம் பிறப்பு எடுக்கிறவன் கொள்கையிலே, மனப்பான்மையிலே, வாழ்க்கை முறையிலே உலகத்தவரோடு கொள்ளுகிற இணக்கத்திலே, படைத்திருக்கிற அறிவிலே, கொள்ளுகிற அன்பிலே படிப்படியாக மேல்நோக்கிப் போய்க்கொண்டிருக்கவேண்டும். மேல்நோக்கிப் போகாது நின்றிருப்பானுகில் அல்லது கீழ்நோக்கிப் போக ஆரம்பித்திருப்பானுகில் அவன் பதிதன் எனப்படுகின்ருன். சமுதாய வாழ்வுக்கு அவன் உதவாதவன் என்பது அதன் பொருள். மக்கள் அனைவரும் துவிஜர்களாய் முன்னேற்றமடையக் கடமைப் பட்டிருக்கின்றனர்.

இனி, சந்நியாசி என்பவன் மூன்ரும் பிறப்பெடுப்பவன் ஆகின்ருன். இருபிறப்பாளனுக்கே சந்நியாசியாவது சாத்தியமாகிறது. ஏனென்ருல் தன் மனதையும் வாழ்வையும் மேலானவைகளாக மாற்றியமைத்துக் கொள்ளத் தெரியாதவனுக்கு இன்னும் மேல்நிலைக்குப் போவது இயலாது. துவிஜன் ஒருவன் வாழ்வில் நல்ல சம்ஸ்காரங்களையே பெற்றுவருகிருன். அதாவது அவன் படைத்துள்ள உபாதிகளெல்லாம் போற்றுதற்குரிய மேலாம் உபாதிகளாம். ஜலத்தை மழைஜலம் என்றும் கங்கா ஜலம் என்றும் பகரும்பொழுது அது மேலான உபாதிகளோடு கூடிய ஜலமாகிறது. தேவாராதனைக்கே அது தகுந்ததாகிறது. அப்படி சம்ஸ்காரங்கள் மூலமாக நல்ல உபாதிகளை ஏற்றுக்கொண்டவன் பிறகு அந்த உபாதிகளையும் புறக்கணிக்கக் கடமைப்பட்டிருக்கிருன். உபாதிகள் அனைத்தையும் துடைத்துத் தள்ளுவது சந்நியாசம். அம்முறையில் சந்நியாசி ஆகிற ஒருவன் பரப்பிரம்மத்துக்கு ஒப்பானவன் ஆகிருன்.

## சாதன வகைகள்

பணத்தைச் சேகரித்துக் கொண்டிருக்கிறவன் பணக்காரன் எனப்படுகிறான். ஏற்கனவே பணத்தை ஏராளமாகச் சேகரித்திருக்கிறவன் பணக்காரன் எனப்படுகிறான். கல்வியைப் பெற்றுக்கொண்டிருப்பவன் கல்விமான் எனப்படுகிறான். முன்பு பயின்று கல்வியை ஏராளமாகப் பெற்றிருப்பவன் கல்விமான் எனப்படுகிறான். யோகப் பயிற்சியில் புதிதாக நுழைபவன் யோகி எனப்படுகிறான். யோகத்தில் முதிர்ச்சியடைந்திருப்பவன் யோகி எனப்படுகிறான். சந்நியாசம் எடுத்துக் கொண்டதும் அதன் உச்சநிலையை எட்டுகிற பரிபக்குவ ஆத்மாக்கள் இருக்கிறார்கள். ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸருக்கு அவருடைய குருவாகிய தோதாபுரி சந்நியாச தீக்ஷை செய்து வைத்ததும் சிஷ்யருக்கு நிர்விகல்ப சமாதி கூடுவதாயிற்று. அத்தகைய தலைத்தரமான பக்குவிகளைக் காண்பது அரிதிலும் அரிது. இனி, சந்நியாச ஆச்ரமத்துக்குத் தங்களை ஆயத்தப்படுத்துகிறவர்களும் சந்நியாச ஆச்ரமம் பூண்டு கொண்டவர்களும் அனுஷ்டிக்க வேண்டிய யதி தர்மங்கள் பல இருக்கின்றன. அந்த நியமங்களைச் சரியாகப் பழகுமளவு சாதகர்கள் ஞானப் பயிற்சியில் முன்னேற்றம் அடைவது திண்ணம்.

## ஜாதி பேதம்

கற்பனையால் மனிதன் தன்னை வெவ்வேறு ஜாதிகளுக்கு உரியவனாக வைத்துக்கொள்கிறான். மேலும் அந்த ஜாதி வகைகளை உயர்ந்தவைகளாகவும் தாழ்ந்தவைகளாகவும் பாகுபடுத்தி அவைகளுள் கட்டுண்டு கிடப்பவர்களாக மக்கள் தங்களை வைத்துக் கொள்கிறார்கள். ஸ்தூல நிலையில்

பட்டுப்பூச்சி தான் உண்டு பண்ணிய பட்டுக் கூண்டினுள் கட்டுண்டு கிடக்கிறது. எண்ணத்தில் மனிதன் தனக்குத் தானே கற்பித்துக்கொண்ட ஜாதியில் கட்டுண்டவன் ஆகிறான். இந்தக் கட்டினின்று தன்னை விடுவித்துக் கொள்ளுவது நல்ல ஆத்மசாதனமாகும். ஔஷதங்களை ஆயத்தப்படுத்துதற்கும், மின் சக்தியை உண்டு பண்ணுதற் கும் சில வேளைகளில் தண்ணீர் தேவை. அதற்குச் சாதா ரண தண்ணீர் உபயோகப்படுவதில்லை. Distilled water என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுகிற ஆவியாக்கிப் பிறகு உறையச் செய்த நீரை அக்காரியங்களுக்குப் பயன்படுத்து கிறார்கள். அப்படித் திருத்தியமைக்கப்பட்ட தண்ணீர் கிணற்று நீர், ஆற்று நீர், கடல் நீர் என்ற உபாதிகளை யெல்லாம் கடந்ததாகிறது. சந்நியாசி ஒருவன் அத்தகைய நன்னீருக்கு நிகராக வேண்டும். தான் எந்த ஜாதியைச் சேர்ந்தவன் என்கின்ற பிராந்தியை அவன் அறவே ஒழித்து விடவேண்டும். மனதில் அதைப் பற்றிய எண்ணத்தை வைத்துக்கொண்டிருக்குமளவு அவனுக்குச் சாதனத்தில் முன் னேற்றம் இல்லை. சிலர் தாங்கள் கீழான ஜாதியைச் சேர்ந் தவர்கள் என்னும் (Inferiority complex) மனச்சிறுமை படைத்தவர்களாக இருக்கிறார்கள். வேறு சிலர் தாங்கள் மேலான ஜாதியைச் சேர்ந்தவர்கள் என்று (Superiority complex) தற்பெருமை படைத்திருக்கிறார்கள். இவ் இரு தரத்தாரும் சந்நியாச ஆச்ரமத்துக்கு உதவாதவர்கள். மனதில் தோய்ந்துள்ள ஜாதி உணர்வு அறவே அகன்று பட்டுப்போக வேண்டும்.

நிகழ்ந்த இரண்டு சம்பவங்கள் சந்நியாசத்துக்குத் தங்களை ஆயத்தப்படுத்துகிறவர்களுக்கு நன்கு உதவும். சுவாமி விவேகானந்தர் பரிவ்ராஜகப் பரமஹம்ஸராக இந்தியா

முழுவதிலும் சுற்றுப் பிரயாணம் செய்தார். அப்பொழுது நம் நாட்டில் பிரபல்யமான மடம் ஒன்றுக்குப் போனார். சம்ஸ்கிருத பாஷையில் சம்பாஷணை துவங்கியது. சிறிது நேரத்துக்குள்ளாக 'உமது ஜாதி என்ன?' என்று மடாதிபதி விசாரித்தார். அதற்குப் பதில் விடுக்காது அவ்விடத்தை விட்டு சுவாமிகள் வெளியேகினார். 'ஏன் போகிறீர்கள்?' என்று மடாதிபதி வினவினார். 'இங்கு நான் எதிர்பார்த்தபடி வேதாந்தி யாரும் இல்லை; சந்நியாசி யாரும் இல்லை. எனவே திரும்பிப் போகிறேன்' என சுவாமிகள் பதில் விடுத்தார். ஜாதியைப் பற்றிய எண்ணத்தை மனதில் கொண்டிருப்பவன் வேதாந்தியுமல்லன்; சந்நியாசியுமல்லன் என்பதை நன்கு ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். கேரளத்திலிருந்த ஸ்ரீ நாராயண குரு, வயல் வரப்பு ஒன்றின் மீது நடந்து போய்க்கொண்டிருந்தார். அவர் எதிரில் நம்பூதிரி ஒருவர் வந்து கொண்டிருந்தார். நம்பூதிரி ஒருவரைத் தம்பிரான் என்று அழைப்பது வழக்கம். தம்பிரானுக்கு மற்றவர்கள் ஒதுங்கி நின்று வழிவிட்டாக வேண்டும். ஆனால் ஸ்ரீ நாராயண குரு அப்படி ஒதுங்கி நிற்கவில்லை. 'ஜாதி என்ன'? என்று நம்பூதிரி கேட்டார். 'பார்த்தால் என்ன ஜாதியாகத் தென்படுகிறது?' என்று நாராயண குரு மறுத்துரைத்தார். 'ஜாதியைப் பார்த்துத் தெரிந்துகொள்ள முடியுமா?' என்று நம்பூதிரி மேலும் கேட்டார். 'பார்த்துத் தெரிந்துகொள்ள முடியாத ஒன்றைக் கேட்டுத் தெரிந்துகொள்ள முடியுமா?' என்று நாராயண குரு விடை விடுத்தார். ஜாதி என்பது எண்ணத்தில்தான் உள்ளது. துறவி ஒருவன் ஜாதியைப் பற்றிய உணர்ச்சிக்கு உள்ளத்தில் இடந்தரலாகாது. சந்நியாசிகளைப் பார்த்து ஜாதி விபரம் கேட்பவர்கள் உண்டு. அப்படிக் கேட்கின்ற

வர்கள் சந்நியாசத்தைப் பற்றிய விஷயம் தெரியாதவர்கள். அத்தகையவர்களுக்குத் துறவியர்கள் விடை கொடுக்கலாகாது. கற்பனையாகப் பால்யத்திலிருந்து சமுதாயம் தங்களுக்குப் புகட்டி வைத்திருக்கிற ஜாதி உணர்வைத் தங்கள் மனதினின்று அறவே அகற்றி விட வேண்டும். இனத்தைப் பற்றிய உணர்வு உள்ளத்தில் இருக்கும் வரையில் ஆத்ம போதம் தலையெடுக்காது.

**ஊர்**

இறைவன் ஊர் இல்லான்; பேர் இல்லான் என அழைக்கப்படுகிறார். ஊர் இடத்தைக் குறிக்கிறது; இடம் தேசத்தில் அடங்கியிருக்கிறது; தேசம் என்பதும் வெட்ட வெளி என்பதும் மனோகற்பிதத்துக்கு அந்நியமாக இல்லை என்பது வேதாந்தத்தின் துணிபு. ஆத்ம சாதனம் பயின்று வருகிற சந்நியாசி ஒருவன் தான் இந்த ஊரைச் சேர்ந்தவன் என்று எண்ணலாகாது. எந்த வேளையில் எந்த இடத்தில் இருக்கின்றானோ அப்போதைக்கு அது அவனுக்கு இருப்பிடமாகிறது. சந்நியாசிக்கு ஸ்வதேசம் புவனத்திரயம் என்றார் சங்கரர். இறுதியில் மூவுலகையும் கடந்துள்ள நிலைக்குத் துறவி ஒருவன் போயாகவேண்டும். ஆதலால் அவனுக்கு இன்ன ஊரைச் சேர்ந்தவன், இன்ன மாகாணத்தைச் சேர்ந்தவன், இந்நாட்டைச் சேர்ந்தவன் என்கின்ற எண்ணமெல்லாம் மனதைவிட்டு அகன்று போயாகவேண்டும். ஊரைக் குறிப்பிட்டே சில துறவிகளுக்கு வழக்கத்தில் பெயர்கள் வந்தமைந்துள்ளன. மாணிக்கவாசகர் திருவாதவூரர் என்று அழைக்கப்படுகிறார். பட்டினத்தடிகள் பெற்றுள்ள பெயரே அவர் இருந்த ஊரை முன்னிட்டாம். இப்படி மற்றவர்கள் அவர்களுக்கு ஊர்ப் பெயரிட்டு அழைப்பினும் சந்நியாசி

களுடைய உள்ளத்தில் அதைப்பற்றிய உணர்வு சிறிதும் இல்லாது போகிறது. விவேகானந்த சுவாமிகள் அமெரிக்காவில் இருந்தபொழுது அவர் விரைவில் தாய்நாட்டுக்குத் திரும்பி வரவேண்டும் என்றும், வெளிநாடுகளில் நெடுங் காலம் வசித்திருக்கலாகாது என்றும் அன்பர்கள் பலர் அவருக்கு எழுதித் தெரிவித்தார்கள். அதற்கு விடையாக விவேகானந்தர் தாம் உலகம் முழுதுக்கும் சொந்தம் என்றும், உலகம் முழுதும் தமக்குச் சொந்தம் என்றும், தம்மீது தனி யுரிமை பாராட்ட யாருக்கும் அதிகாரம் இல்லையென்றும் தெரிவித்தார். இப்படி இடப்பற்றையெல்லாம் கடந்தவனாக சந்நியாசி ஒருவன் இருந்து பழகவேண்டும்.

## மொழி

மனிதன் தனக்குத்தானே உண்டுபண்ணிக்கொள்கிற பந்தங்கள் பலவற்றுள் மொழிப்பற்று ஒன்று. தான் குழந்தைப் பருவத்திலிருந்து பேசிப்பயின்று வந்துள்ள தாய் மொழியில் ஒருவனுக்கு இயல்பாக பற்றுமிக வந்திருக்கிறது. தளைகள் அனைத்தினின்றும் தன்னை விடுவித்துக்கொள்ள முயலுகிற சந்நியாசி மொழியின் பயன் என்ன என்பதை அறிந்திருக்க வேண்டும். பொருள்களை விலைக்கு வாங்குதற்குப் பணம் பயன்படுவது போன்று கருத்துக்களைப் பரஸ்பரம் பரிமாறிக்கொள்ளுதற்குப் பாஷை பயன்படுகிறது. பொருள்களை வாங்குவதற்கு எல்லாத் தேசத்துப் பணமும் பயன்படுவது போன்று, கருத்துக்களை வழங்குதற்கும் ஏற்பதற்கும் எந்த மொழியும் பயன்படவல்லது. ஆனால் சில மொழிகள் சில துறைகளிலே உள்ள விஷயங்களைச் சிறப்பாக எடுத்து விளக்க வல்லவைகளாக இருக்கின்றன. அந்த அளவில் அம்மொழிகளிடத்துத் தனிச் சிறப்பு இருப்பதும் இயல்பு.

பாரமார்த்திக விஷயத்திற்கு சம்ஸ்கிருத பாஷை இந்தியாவில் நன்கு பயன்பட்டு வருகிறது. லத்தீன் பாஷை அதே விதத்தில் ஐரோப்பாவில் பயன்பட்டு வருகிறது. ஆனால் சம்ஸ்கிருதம் பயிலாது இந்திய சந்நியாசி ஒருவன் துறவில் மேன்மையடைய முடியாது என்றும், லத்தீன் மொழி கற்றுக் கொள்ளாது கிறிஸ்தவ துறவி ஒருவன் துறவிலே மேன்மையுற முடியாது என்றும் கருவது சரியல்ல. சம்ஸ்கிருதம், லத்தீன் போன்ற மொழிகள் சீரிய மொழிகள் எனினும் துறவறத்துக்கு அவைகள் முற்றிலும் அவசியமானவைகளல்ல. ஏதேனும் சில மொழிகளுக்கென்றே உழைத்து வரும் துறவியர்கள் உளர். மொழிப்பற்று என்னும் மயக்கத்தில் அவர்கள் மூழ்கிப் போகலாகாது. வாய்த்துள்ள ஏதேனும் ஒரு மொழி அல்லது சில மொழிகளில் சந்நியாசி ஒருவன் சீரிய நூல்களை இயற்றலாம். ஆனால் நூல்களை இயற்றுவதும் இலக்கியங்களை இயற்றுவதும் வாழ்க்கையில் அவனுடைய குறிக்கோள் ஆகா. சொல் இறந்த தொன்மையன் ஆகிய பரம்பொருளில் லயமாவது சந்நியாசத்தின் குறிக்கோள். மார்க்கத்தில், மொழியில், கட்டுண்டு கிடப்பது துறவி ஒருவனுக்கு ஒவ்வாது. மொழிகளையெல்லாம் கடந்துள்ள மௌனத்தை எட்டும்பொழுதே சந்நியாசம் முற்றிலும் பூர்த்தியாகிறது. மனதற்ற பெருநிலைக்கு மொழி எதுவும் பயன்படாது.

### உற்றார்

துறவிக்கு உற்றாருமில்லை; வேற்றாருமில்லை. அவனுக்கு உயிர்கள் அனைத்தும் பரம்பொருளின் தோற்றங்கள். இந்நிலையை சுவானுபவத்தில் பெறுதற்குச் சந்நியாசி ஒருவன் சின்னஞ்சிறு வயதிலிருந்தே தனக்கு மாதாபிதாக்களாக

இருந்தவர்களிடத்தும், உடன் பிறந்தவர்களிடத்தும், உற்றார் உறவினர்களிடத்தும் வைத்துள்ள பற்றுதலை முற்றிலும் அகற்றவேண்டும். ஒரு மரத்தில் தோன்றி முதிர்ந்து கனிகின்ற கனி ஒன்று தன்னிடத்துப் பக்குவம் ஆனதும் தன்னை உருவாக்கிய மரத்தினின்று விலகிக்கொள்கிறது. சந்நியாசி ஒருவன் செய்கிற செயலும் அத்தகையதே. அவன் உற்றாரை வெறுத்துப் புறக்கணிப்பவன் அல்லன். உற்றார் இடத்திலேயே தனிப்பற்று வைத்து அவர்களிடத்தி லேயே அவன் கட்டுண்டு இருப்பவனும் அல்லன். விவே கத்தின் விளைவாகச் சம திருஷ்டியுடன் உயிர்கள் அனைத் தையும் அவன் நோக்குகிறான். யாரையும் பகையாக அவன் பாவித்துக்கொள்வதில்லை. உலகிலுள்ள உயிர்கள் அனைத் துக்கும் அபயம் கொடுப்பவனும் அவைகளிடத்து அன்பு பாராட்டுபவனும் அவை யாவையும் சமதிருஷ்டியுடன் நோக்குபவனும் சமயம் வாய்த்தகாலை அவ்வுயிர்களுக்கு அருட்பணியாற்றுபவனும் சந்நியாசி ஆகிறான். நடுநிலை பிறழாதிருக்கும்பொழுதே இத்தகைய சீரிய மனப்பான்மை வந்தமைகிறது.

## உணவு

உணவுக்கும் உடல் வளர்ச்சிக்கும் நெருங்கிய தொடர்வு உண்டு. தூய நல்லுணவையே சாதனங்கள் பயின்று வருகிற சந்நியாசி ஒருவன் ஏற்கவேண்டும். சத்துவ குணத்தை வளர்க்கிற உணவு அவனுக்கு முற்றிலும் பொருத்தமானது. மது, மாமிசம் போன்றவை அவனுக்கு ஒருபொழுதும் ஒவ்வா. தூய நல்லுணவை நல்லாரிடத்திருந்து ஏற்பது அவனுக்குப் பொருந்தும். ஆனால் உணவை ஏற்பதில் அவன் ஜாதி வேற்றுமைக்கு இடங்கொடுப்பானாகில் அக்கணமே

அவன் பதிதன் ஆகின்ருன். மக்களுக்கிடையில் பேத புத்தியை வளர்ப்பது சந்நியாச ஆச்ரமத்தின் குறிக்கோள் அன்று. ஜாதிபேதம் முற்றிலும் லௌகிக ஏற்பாடு ஆகும். ஆத்மசாதனத்துக்கும் அதற்கும் எவ்விதமான தொடர்வும் இல்லை. சாதனத்தின் ஆரம்பதசையிலிருக்கிறவன் துஷ்டர் களிடத்திருந்தும் ஆசாரம் குறைந்தவர்களிடத்திருந்தும் ஆகாரம் ஏற்கலாகாது. ஆனால் தீவிர பக்குவம் வாய்த்த பிறகு நல்லார் பொல்லார் என்ற வேற்றுமை தானாக மறைந்து போகிறது. கனத்த காட்டுத் தீ வாழை மரத்தையும் சாம் பலாக்குவது போன்று தீர்க்கதரிசியின் காட்சியில் நல்லார், பொல்லார் ஆகிய எல்லாரும் பரம்பொருளின் சொரூபங் களாகின்றனர். கெட்டவர்களிடத்திருந்தும் உணவை ஏற்ப தால் அக்கெட்டவர்களை நிறைஞானி நல்லவர்களாக மாற்றி யமைக்கிருன்.

### சமயம்

உலகில் மதங்கள் பல இருக்கின்றன. அவைகளிடத்து உட்பிரிவுகளும் பல இருக்கின்றன. சமயங்கள் பலதரப் பட்டவைகளாக உலகில் அமைந்திருப்பது வெளிப்படை. சந்நியாசி ஒருவன் தனது இளம்பிராயத்தில் ஏதேனும் ஒரு சமயத்தைச் சார்ந்து அதில் ஊறி வளர்ந்து வந்திருக்கலாம். ஆனால் அவன் சந்நியாசம் ஏற்கும்பொழுதே தனியாக ஏதேனும் ஒரு சமயத்தைச் சார்ந்திருக்கும் இயல்பைத் துறந்தாக வேண்டும். சரியான சந்நியாசியே சரியான வேதாந்தியாகிருன். வேதாந்தம் என்பது மற்ற சமயங் களைப்போன்று அமைந்துள்ள ஒரு சமயம் அன்று. எல்லாச் சமயங்களுக்கும் பொதுவாயுள்ள தத்துவங்களின் தொகை வேதாந்தம். பேரரசன் ஒருவன் தனது குடிமக்கள்

அனைவர்க்கும் வேந்தனுயிருப்பது போன்று வேதாந்தம் சமயங்கள் அனைத்துக்கும் உயிர் தந்து ஊக்கத்தை வளர்க்கிறது. சந்நியாசி நடுநிலையிலிருந்து சமயங்கள் அனைத்திடத்தும் சமரச நோக்கம் கொண்டிருக்கிருன். கண்ணுடியின் முன்னிலையில் யார் வந்து நின்ருலும் அவரவர் அமைப்பை அது உள்ளபடி விளக்கிக்காட்டுகிறது. ஆனல் யாருடைய அமைப்பையும் தன்னுடைய அமைப்பாக அக்கண்ணுடி ஏற்றுக்கொள்வதில்லை. அத்தகைய நிலைக்கண்ணுடிக்கு நிகரானவன் சந்நியாசி. ஜகத்குரு ஆதிசங்கரர் ஹிந்து மதத்துக்குரிய ஆறு சமயங்களையும் சமதிருஷ்டியுடன் நோக்கினர். ஆறு சமயங்களையும் ஒரே பாங்கில் வளர்த்து வந்தார். இக்காலத்தில் விவேகானந்த சுவாமிகள் அம்முறையில் நடந்துகொண்டார். அமெரிக்காவில் நிகழ்ந்த சர்வ மத மகாசபையில் புத்தமதப் பிரதிநிதி ஒருவருக்குப் புத்த மதத்தைத் தெளிந்த முறையில் அவர் இயற்றிக்கொடுத்தார். கிறிஸ்தவ மதத்தின் சிறப்பையும் இஸ்லாமிய மதத்தின் சிறப்பையும் விவேகானந்த சுவாமிகளிடத்திருந்து நாம் நன்கு அறிந்துகொள்ளலாம். ஈசனுடைய திருவுளத்துக்கு ஒப்ப உலகில் மதங்கள் பல தோன்றியுள்ளன. அத்தனை வித மதங்களும் வெவ்வேறு மனப்பான்மையுடையவர்களுக்கு அவசியமாகின்றன. ஈசன் அத்தனைவித மதங்களையும் சமதிருஷ்டியுடன் பரிபாலித்து வருவது போன்று சந்நியாசி ஒருவனும் மதங்கள் யாவையும் அவ்வகைகளுக்குரிய சீரிய நிலைகளில் வைத்துப் பாராட்டி வருகிருன். அதற்கு மாருகத் தனியாக ஏதேனும் ஒரு சமயத்திடத்துப் பற்று வைக்கிறவன் தனது பெருநிலையினின்று இரண்டொரு படி கீழே இறங்கி வந்தவன் ஆகிருன். சமயங்கள் அனைத்துக்கும் செம்மை நல்குபவன் சந்நியாசி.

## விவாஹச் சடங்கு

உலகத்தவர்கள் பழகுவது பிரவிருத்தி மார்க்கம். பிறவியை வளர்ப்பதில் அறிந்தோ அறியாமலோ அவர்கள் ஈடுபட்டிருக்கின்றனர். ஆனால் சந்நியாசி ஒருவன் கடைப் பிடிப்பது நிவிருத்தி மார்க்கம். பிறவிப் பெருங்கடலினின்று தன்னை விடுவித்துக்கொள்ள அவன் திட்டம் போட்டு முயன்று வருகிறான். எனவே பிரவிருத்தியும் நிவிருத்தியும் ஒன்று சேர்ந்திருக்கமாட்டா. இருளும் வெளிச்சமும் எப்படி ஒன்று சேர்ந்திருக்க முடியாதோ அப்படி பிரவிருத்தியும் நிவிருத்தியும் சேர்ந்திருப்பதில்லை. விவாஹம் பண்ணி வைப்பதை உலகத்தவர்கள் கல்யாணம் பண்ணி வைப்பது என்கின்றனர். கல்யாணம் என்னும் சொல்லுக்குப் பொருள் மங்களம் என்பதாம். சந்நியாசியின் காட்சியில் விவாஹம் மங்களமானதன்று. அது முற்றிலும் அமங்களமானது. ஏனென்றால் மனிதனைப் பிறவிப் படுகுழியில் அது தள்ளு கிறது. ஆதலால் விவாஹத்தைப் பற்றிய பேச்சில் சந்நியாசி கலந்து கொள்ளலாகாது. அப்பேச்சுக்கு அவன் காது கொடுப்பதும் தகாது. மணம் பண்ணுவதைப்பற்றி உலகத் தவர்கள் பேசிக்கொண்டிருக்கும் பொழுது சந்நியாசி உதா சீனனாக இருந்து வரவேண்டும் அல்லது அவ்விடத்தை விட்டு அப்பால் போய்விடவேண்டும். மணச் சடங்குகளை எப்படி எப்படி முடிப்பது என்று சந்நியாசி ஒருவன் நூல் எழுதலாகாது. அப்படி மற்றவர்கள் எழுதி வைத்துள்ள நூல்களை அவன் வாசிக்கலாகாது. சந்நியாசி ஒருவனுடைய அந்தரங்க அமைப்பை உலகத்தவர்கள் அறிந்துகொள்வ தில்லை. அப்படி அறிந்து கொள்ளாமையினால் சந்நியாசிகளை அவர்கள் மணச் சடங்குகளுக்கு வந்து சேரும்படி அழைப்பு அனுப்புவதுண்டு. மணச் சடங்குகளைச் சந்நியாசிகளே

தலைமை தாங்கியிருந்து நடத்தி வைத்துத் தரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறவர்கள் இருக்கிறார்கள். அப்படி அவர்கள் கேட்டுக் கொள்ளுதலில் குற்றம் ஒன்றும் இல்லை. ஏனென்றால் நல்லார் ஒருவர் மூலம் நல்ல காரியம் நடைபெற வேண்டும் என்பது அவர்கள் கருத்து. ஆனால் சரியான சந்நியாசி ஒருவன் தன் உடல் அமைப்பை நடமாடும் பிண மாக வைத்துக்கொள்கிறான். தான் சந்நியாசம் எடுத்துக் கொள்வதற்கு முன்பு தனது உடலை, செத்துப்போனதாகக் கருதி அதற்கு ஆத்ம பிண்டம் போடுகிறான். உலக வாழ்க்கைக்கு உதவாததாக அவ்வுடலைச் செத்ததுபோன்று வைப்பது பூஜை. ஆனால் பாரமார்த்திகக் காரியத்துக்கு மட்டும் அது பயன்பட்டு வருகிறது. அப்பாரமார்த்திகக் காரியங்களும் எப்பொழுதுமே நிவிருத்தியை அடிப்படையாகக் கொண்டவைகளாம். தன் உடலைப் பிரேதமாகக் கருதுகிற சந்நியாசி மணம் நிகழுகிற இடத்தில் இருப்பானாகில் அது மணச் சடங்குக்கு ஒவ்வாதது; அமங்களமானது. சந்நியாசியின் திருமேனி மணம் நிகழ்கிற வீட்டுக்குள் அவ்வேளையில் வாராதிருக்கும்படி பார்த்துக்கொள்வது இல்லறத்தாருடைய கடமையாகும். இனி, சந்நியாசி ஒருவன் மணம் முடித்துக் கொள்ளுதற்காகக் கங்கணம் கட்டியிருக்கும் மணமகனையும் மணமகளையும் கண் எடுத்துப் பார்க்கலாகாது. அப்படி அவன் பார்ப்பானாகில் அவன் யதி தர்மத்தினின்று வழுவியவன் ஆகின்றான். மணமக்களின் காட்சி அவனுக்கு யாண்டும் ஒவ்வாதது. சந்நியாசி ஒருவனைத் தரிசித்து ஆசீர்வாதம் பெற வருகிற தம்பதிகள் மணக் கோலத்துடன் வரலாகாது. மணக்கோலத்தையெல்லாம் ஒதுக்கி வைத்தான பிறகு நல்வாழ்வு வாழ விரும்புகிறவர்கள் என்னும் பான்மையுடன் சந்நியாசி ஒருவரை வந்து

தரிசிக்கலாம். அவன் பாதத்தில் விழுந்து வணங்கலாம். ஆனால் மணக்கோலத்திலிருக்கும்பொழுது அவனைக் கண்ணெடுத்துப் பார்க்கலாகாது. மணமக்கள் ஊர்வலம் வரும்பொழுது சந்நியாசி அவர்கள் எதிரில் போகலாகாது. அக்காட்சியை அவன் வேடிக்கை பார்க்கலாகாது. ஊர்வலம் வருகிற மணமக்களும் சஞ்சரித்துத் திரிகிற சந்நியாசியும் நேருக்கு நேரே சந்தித்துக் கொள்வார்களாகில் அது இரு தரத்தாருக்கும் அமங்களமாம். மணச்சடங்கு நடைபெறுகிற வீட்டில் அச்சடங்குகள் முடியும் பரியந்தம் சந்நியாசி ஒருவன் பிக்ஷையேற்றுக் கொள்ளலாகாது. விவாஹத்தோடு இணைக்கப்பட்டு அவனுக்கு அளிக்கிற பழவகைகளையும் பட்சணவகைகளையும் அவன் அருந்தலாகாது. அத்தகைய உணவு வகைகள் யாவும் பிரவிருத்தியோடு இணைக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் அவைகளை அருந்துவது அவனுடைய ஆத்ம சாதனத்துக்குத் தடையாகும்.

## சிராத்தம்

சிராத்தச் சடங்குக்கும் சந்நியாச ஆச்ரமத்துக்கும் எந்த விதமான தொடர்பும் இல்லை. சிராத்தம் பண்ணுகிறவர்கள் பித்ருதேவதைகளை வணங்குகிறார்கள். அத்தகைய வணக்கம் ஈசுவர ஆராதனை போன்றது அன்று. ஈசுவர ஆராதனைக்குப் பல படிகள் அது கீழே இருக்கிறது. சிராத்தச் சடங்குகளைச் செய்துகொண்டிருக்கிற குடும்பஸ்தர்கள் சந்நியாசியை அவ்விடத்துக்கு அழைக்கலாகாது. தற்செயலாகவும் அவ்விடத்துக்குச் சந்நியாசி போகலாகாது. சிராத்தச் சடங்கு நிகழ்கிறது என அறியும்பொழுதே சந்நியாசி அவ்விடத்தை விட்டு அப்பால் போய்விடவேண்டும். மணச்சடங்கு போன்றே சிராத்தச் சடங்கும் சந்நியாச ஆச்ரமத்

துக்கு ஒவ்வாதது. மண்டனமிஸ்ரர் என்னும் குடும்பஸ்தர் ஒருவர் கர்மகாண்டத்தில் பற்று மிக வைத்தவராய் தமது பிதுர் தேவதைகளுக்குச் சிராத்தச் சடங்குகள் செய்து கொண்டிருந்தார். அவ்வேளையில் ஜகத்குரு ஆதி சங்கரர் வேண்டுமென்றே வலிய அவ்விடத்தில் பிரசன்னமானார். மண்டனமிஸ்ரருக்கு அவருடைய அடாத செயலை முன்னிட்டு ஆத்திரம் மிக வந்தது. அதைக் குறித்துப் பேச்சு வார்த்தைகள் கிளம்பின. அது ஒரு நீண்ட விவாதமாக வடிவெடுத்தது. அப்பொழுது இருவருக்குமிடையில் சபதம் ஒன்று நிகழ்வதாயிற்று. சாஸ்திர ரீதியாக மண்டனமிஸ்ரர் சங்கரரைத் தோற்கடிப்பதானால் அவர் சந்நியாச ஆச்ரமத்தைத் துறந்துவிட்டுக் குடும்பி ஆக வேண்டியது. அப்படியல்லாது மண்டனமிஸ்ரர் தோல்வியடைந்தால் அவர் குடும்ப வாழ்க்கையைத் துறந்துவிட்டுச் சந்நியாச ஆச்ரமத்தை ஏற்கவேண்டியது. இந்த நிபந்தனையின்படி நிகழ்ந்த விவாதத்தில் மண்டனமிஸ்ரர் தோல்வியடைந்து போனார். அவர் சங்கரருடைய சந்நியாச சிஷ்யர்களுள் முக்கியமான ஒருவராக அவ்ஆச்ரமத்தை ஏற்க வேண்டியதாயிற்று. அவரை ஆட்கொள்ளுதல் பொருட்டே சங்கரர் வலிய சிராத்தம் நடந்த இடத்துக்குப் போய்ச் சேர்ந்தார். சிராத்தத்தோடு சம்பந்தப்பட்ட உணவைச் சந்நியாசி பிக்ஷையாக ஏற்கலாகாது என்பது நியமம். அது அவனுடைய ஆத்ம சாதனத்துக்குப் பெருந்தடையாகும். அதற்குச் சான்று ஒன்றை ஈண்டு எடுத்துரைப்பது அவசியமாகிறது. ஸ்ரீ கிருஷ்ண சைதன்யர் பகவத் பஜனை என்னும் அருள் விருந்தை மக்களுக்கிடையில் ஏராளமாக வழங்கி வந்தார். அவரைப் பின்பற்றிப் பலபேர் பஜனை பண்ணுவதற்கிடையில் ஆனந்த பரவசமடைவதுண்டு. அப்படி ஆனந்த

பரவசம் அடைந்த பாமரர் சிலர் அப்பரவச நிலையிலேயே இருக்கலாயினர். அப்படி அவர்கள் நெடிது அந்நிலையிலிருந்தது அவர்களுக்கு ஒவ்வாதது. அந்நிலையினின்று அவர்களைச் சாதாரண நிலைக்குக் கொண்டு வருவதற்கு முறையொன்று கையாளப்பட்டது. சிராத்தம் நடைபெற்றுக் கொண்டிருந்த ஒரு வீட்டினின்று உணவைக் கொஞ்சம் கொண்டு வந்து பரவசத்திலிருந்தவர்களின் வாயில் போட்டார்கள். அப்படிச் செய்தவுடனே அவர்களுடைய மனது உலக உணர்வுக்கு இறங்கி வந்தது.

பிரேதம் ஒன்று உலகத்தவர்களுக்குத் தீட்டை உண்டு பண்ணக் கூடியது. ஆனால் சந்நியாசிக்கோ அது மிகத் தூயது. காசியில் சவங்கள் தகனமாய்க் கொண்டிருக்குமிடத்தில் சந்நியாசிகள் அமர்ந்து தியானம் பண்ணுவதுண்டு. சிவபெருமான் ஸ்மசானவாசி எனப்படுகிறார். காசி க்ஷேத்திரம் மகா ஸ்மசானம் எனப்படுகிறது. காசி வாசம் பண்ணுவதே ஸ்மசானத்திலிருப்பதற்கு நிகர். 'கோயில் சுடுகாடு' என்று சொல்லப்படுவதன் உட்கருத்து இதுவேயாம். உலகத்தவர்கள் பிரேதத்தையும் ஸ்மசானத்தையும் அணுகத் தகாதவைகள் என ஒதுக்கி வைக்கின்றனர். ஆனால் சந்நியாசியோ தன் உடலைத் தானே பிரேதம் போன்றதாக ஆக்கிக்கொண்டதனால் அந்த எண்ணத்தில் நன்கு உறுதி கொண்டிருத்தல் பொருட்டுப் பிரேதம் தகனமாகிற இடத்தைப் புனிதம் வாய்ந்த ருத்திர பூமியாகக் கருதி ஆங்கு அமர்ந்து அவன் தியானம் பண்ணுகிறான். மரணத்தோடு உறவு கொண்டாடுகிறவன் சந்நியாசி.

**சமயத்தின் ஜீவநாடி**

ஒவ்வொரு சமயத்திலும் மூன்று அம்சங்கள் இருக்கின்றன. அவைகளை முறையே கிரியைகள் (Rituals), புராண

இதிகாசங்கள் (Mythology and Epics), தர்சனம் (Philosophy) என்கின்ரேம். இந்த மூன்று அம்சங்களும் சரியாக அமையப்பெருவிட்டால் சமயம் பூர்த்தியாவதுமில்லை; அது ஓங்கி வளர்வதுமில்லை. இம்மூன்றனுள் கிரியைகள் என்னும் பகுதி ஆலய வழிபாட்டோடு சம்பந்தப்பட்டது. ஆலயங்களைத் தத்துவத்துக்கு ஒப்ப அற்புதமாக அமைப்பதும் தத்துவங்களுக்கு விளக்கங்களாக ஆராதனை முறைகளையும் கிரியா விசேஷங்களையும் சிறப்பாகச் செய்வதும் ஐதிகமாகும். இச்செயல்களில் ஈடுபட்டிருப்பவர்கள் அர்ச்சகர்கள் என்றும் புரோகிதர்கள் என்றும் அழைக்கப்படுகின்றனர். இவர்கள் குடும்பிகளாகவே இருந்தாக வேண்டும். தத்துவங்களைக் கதைகள் வாயிலாகவும் மகாபுருஷர்களுடைய ஜீவிதங்கள் வாயிலாகவும் மக்களுக்கிடையில் பரப்புதற்குப் புராண இதிகாசங்கள் அமைந்திருக்கின்றன. சாஸ்திரங்களை நன்ருகக் கற்றறிந்திருக்கும் குடும்பஸ்தர்களும் துறவியர்களும் இப்பணியில் ஈடுபடலாம். ஆனல் துறவியர்கள் தங்களுடைய பாரமார்த்திக வாழ்க்கையின் ஆரம்ப தசையில் புராண இதிகாசங்களில் கருத்தைச் செலுத்தலாம். அவைகளை மக்களுக்கிடையிலே பரப்பவும் முற்படலாம். பின்பு சந்நியாசிகள் அதிவிரைவில் தர்சனத்துக்கு விளக்கமாகத் தங்கள் வாழ்க்கையை அமைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். சமய அமைப்பை மானுட அமைப்போடு ஒப்பிட்டுச் சொல்லலாம். மானுட வாழ்வில் உயிர்க்கு ஒப்பானது தர்சனம். உடலுக்கு ஒப்பானது புராண இதிகாசங்கள். உடலிலே நிகழ்கின்ற செயல்களுக்கு ஒப்பானவைகள் கிரியைகள். உயிரில்லாது போனல் உடல் பிணமாய் மாறும். அதில் செயல் ஒன்றும் நிகழாது. தர்சனத்துக்கு விளக்கமாகச் சந்நியாசியினுடைய வாழ்க்கை அமைந்திருப்பது ஜீவநாடி ஒழுங்காக அடித்துக்

கொண்டிருப்பதற்கு ஒப்பாகும். பேச்சுத் திறமை வாய்ந்தவனைச் சந்நியாசி ஒருவன் இருந்தால் போதாது. வாழ்க்கையைத் தர்சனத்துக்கு ஒப்ப அவன் வாழவேண்டும். தர்சனத்துக்கு விளக்கத்தைச் சந்நியாசியினுடைய வாழ்க்கையில்மற்றவர்கள் காணவேண்டும். தான் வாழ்ந்து வருகிற பாரமார்த்திக வாழ்வு சந்நியாசி உலகுக்களிக்கும் பெருங் கொடையாகிறது. மலரானது மணத்தையும் அழகையும் வழங்குவது போன்று சந்நியாசியின் வாழ்வு தத்துவத்துக்கு விளக்கமாக இலங்குகிறது.

சந்நியாசிகளில் சிலர் மடாதிபதிகளாக அமைகின்றனர். அப்படி அமைவதால் அவர்களில் பெரும்பாலர் தங்களுக்குரிய பாரமார்த்திகப் பெருவாழ்வினின்று கீழே இறங்கி வருகின்றனர். அருள் துறையில் செல்லவேண்டிய ஆற்றல்களெல்லாம் பொருள் துறையிலும் நிர்வாகத் துறையிலும் போய்க் கீழ்மையடைந்து போகின்றன. சிலர் மடாதிபதிஸ்தானத்துக்கென்றே பிரம்மச்சரிய ஆச்ரமத்திலிருந்து தயாரிக்கப்படுகின்றனர். சந்நியாசப் பெருவாழ்வுக்கு அது ஒவ்வாது. நெடுங்காலம் சந்நியாசத்துக்குரிய தவ வாழ்க்கையில் இருந்த பிறகு தாற்காலிகமாக வாழ்க்கையின் பிற்பகுதியில் மடாலயங்களுக்குத் தலைவர்களாக வருவதில் தோஷமில்லை ஆயினும் தீவிர சந்நியாசி ஒருவனுடைய வாழ்வு தத்துவத்துக்கு விளக்கமாகிய தவத்தில் துவக்கி தவத்தில் பூர்த்தியாக வேண்டும். மடங்கள் சிலவற்றில் மூர்த்திகளும், லிங்கங்களும், சாளக்கிராமங்களும் தலைமுறை தலைமுறையாக வழிபடப்படுகின்றன. அத்தகைய வழிபாடு உண்மையில் கிரியைகளைச் சார்ந்தவைகள். துறவறத்தில் புதியதாக நுழைந்திருக்கின்றவர்கள் கொஞ்ச காலத்துக்கு அத்தகைய கிரியைகளில் ஈடுபடலாம். ஆனால் அந்த ஸ்தாபனங்களுக்குத் தலை

வர்களாக இருக்கிறவர்கள் அத்தகைய பீடங்களுக்குப் பூஜை செய்து வருவது சந்நியாச தர்மத்துக்கு ஒவ்வாது. ஏனென்றால் தர்சனம் என்னும் உயர்நிலையினின்று வழுவிக் கிரியை என்னும் ஆரம்பநிலைக்கு அவர்கள் இறங்கியவர்களாகிறார்கள். மடாதிபதிகள் நித்திய பூஜைகள் செய்வதைப் பார்ப்பதற்கும் அவர்கள் கைப்பட வழங்கும் பிரசாதங்களை ஏற்பதற்கும் குடும்பிகள் பலர் திரள் திரளாகக் கூடுகின்றனர். சந்நியாசி ஒருவன் அம்முறையிலே பொதுமக்களை நன்னெறியில் நடாத்துவது பொருந்தாது. அக்ஞான இருளில் தான் உழல்பவனாகவும் அக்ஞான இருளை உலக மக்களுக்கிடையில் பரப்புபவனாகவும் ஆகிறான் அத்தகைய சந்நியாசி.

यच्चक्षुषा न पश्यति येन चक्षूंषि पश्यति
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते ॥

யச்சக்ஷுஷா ந பச்யதி யேன சக்ஷூம்ஷி பச்யதி
ததேவ ப்ரஹ்ம த்வம் வித்தி நேதம் யதிதமுபாஸதே

'எது ஊனக்கண்ணால் பார்க்கப்படுவதல்லவோ ஆனால் எது ஊனக்கண்ணுக்குப் பார்க்கும் திறமையை நல்குகிறதோ அதுவே மெய்ப்பொருள். மக்கள் வணங்கும் சின்னம் மெய்ப்பொருளாகாது.' இக்கோட்பாட்டுக்கு ஒப்பத் தன்னைச் சாரும் சாதகர்களுக்கு ஆத்மபோதத்தை ஊட்டுவதே சந்நியாசியின் தர்மமாகும். பூஜைகளிலும் கிரியா விசேஷங்களிலும் மக்களுடைய மனதைச் செலுத்துவது சந்நியாசியின் தர்மமாகாது. கல்லூரியிலிருக்கும் பேராசிரியன் ஒருவன் பள்ளிக்கூடத்து உபாத்தியாயர் போன்று பிள்ளைகளுக்குப் பாடம் புகட்டுவதில்லை. கல்லூரி மாணாக்கர்களுடைய சிந்தனா சக்தியைச் சரியான வழியில் தூண்டித்தருவது கல்லூரிப் பேராசிரியன் கடமையாகிறது. சந்நியாசி

யினுடைய கடமை அதிலும் சிறந்ததாகிறது. தன்னை வந்து நாடுகிற ஆத்ம சாதகர்களுடைய வாழ்க்கையைச் செப்பனிடுவதும் சரியான மார்க்கத்தில் அதைத் தூண்டுவதும் சந்நியாசியினுடைய கடமையாகிறது. சிவபெருமான் தக்ஷிணாமூர்த்தியாக எழுந்தருளித் தாம் இருக்கவேண்டிய நிலையில் இருந்து சிஷ்யர்களுக்கு மெய்ஞ்ஞான போதத்தை ஊட்டுகிறார். நடமாடும் தக்ஷிணாமூர்த்தியாயிருப்பது சந்நியாசியின் ஸ்வதர்மம். வாழ்க்கையின் மூலம் தத்துவவிளக்கம் ஒன்றே அவனது தனிச்செயல். அப்பெருநிலையினின்று பாமரர்கள் செய்கிற சாமானிய அறச்செயல்களுக்குச் சந்நியாசி இறங்கி வரலாகாது. தான் இருக்கவேண்டிய பெருநிலையில் அவன் நிலைத்திருப்பானாகில் அவன் மூலம் சமயம் தானாகத் தழைத்து ஓங்குகிறது. சமயத்துக்கு உயிராயிருப்பவன் சந்நியாசி.

## அதிசயச் செயல்கள்

ஆத்ம சாதனத்தில் மேல்நோக்கிப் போகிறவர்களில் சிலர்க்குச் சித்திகள் வாய்ப்பதுண்டு. சித்திகளோ பலதரப்பட்டவைகள். தன் சரீரம் பிறர்க்குக் கட்புலனாகாது சூட்சும நிலை எய்தும்படி செய்வது ஒருவித சித்தி. ஒரே வேளையில் பல இடங்களில் தன்னைக் காட்டிக்கொள்வது ஒருவித சித்தி. விரும்பிய பொருள்களை வெட்டவெளியில் கை நீட்டிப் பெறுவது ஒருவித சித்தி. மண்ணினுள் புதையுண்டு நெடுநாள் இருந்து எழுந்து வருவது ஒருவித சித்தி. நீர்மேல் நடப்பது, நெருப்பின் மேல் நடப்பது, நீரினுள் நெடிது மூழ்கியிருப்பது ஆகியவைகளும் சித்திகள் இனத்தைச் சேர்ந்தவைகள். இவைகளுள் ஏதேனும் ஒரு சித்தி ஆத்மசாதகன் ஒருவனுக்கு வாய்க்குங்கால் அவன் அதில் பெரிதும் மயங்கிப்போகிறான் அதை உலகத்தவர்களுக்குக் காட்ட முற்படுகிறான். உலகத்

தவர்களோ அத்தகைய ஆத்ம சாதகனைச் சித்த புருஷன் எனக்கருதிப் போற்றுகின்றனர். ஆயிரக்கணக்கான பேர் சித்திவிளையாடல்களைக் காண முந்துகின்றனர். சித்திகளைக் காட்டுகின்றவனைப் போற்றிப் பாராட்டுகின்றனர். ஆனால் ஆத்ம சாதகர்களுள் சித்தியில் ஈடுபடுகிறவன் பதிதன் அல்லது நெறி வழுவியன் ஆகிறான். தன்னை விளம்பரப்படுத்திக் கொள்ளும் அகங்காரம் அவனிடத்து வருகிறது. விளம்பரம் நிறைந்த ஆடம்பர வாழ்க்கை அதிவிரைவில் அவனுக்குக் கிட்டுகிறது. ஆனால் சித்தி விளையாடுகிறவனுடைய வாழ்வு எப்பொழுதும் அமங்கலமாக முடியும். இயற்கையின் நடைமுறையில் தற்பெருமையின் பொருட்டு அவன் தலையிடுகிறான். உலகுக்கு வியப்பூட்டுவதாக அவனது அதிசயச்செயல் துவங்குகிறது. ஆனால் தனக்கும் பிறர்க்கும் கேடு விளைவிப்பதாக அது முற்றுப்பெறுகிறது.

சந்நியாசி தன் அகந்தையைத் துறந்தவனாகின்றான். தன் மனதை முற்றிலும் ஒடுக்கியவன் சந்நியாசி. எனவே சித்திகள் விளையாடுவது சந்நியாசத்தின் குறிக்கோள் அன்று. தற்செயலாய் தனக்கு ஏதேனும் சித்தி வாய்க்குமாகில் அதிக எச்சரிக்கையுடன் அவன் அதை ஒதுக்கி வைக்கிறான். அதைப்பற்றி அவன் யாரிடமும் பகர்வதில்லை. தனக்கு விக்னங்களாகச் சித்திகள் வாய்க்காதிருக்க வேண்டும் என்று தனது உபாசனா மூர்த்தியிடம் அவன் விண்ணப்பிக்கிறான். ஜீவ வியக்தியை ஒழிப்பது சந்நியாசம். ஜீவ வியக்தியை ஓங்குவிப்பது சித்தி. எனவே சந்நியாசமும் சித்தியும் ஒன்றோடு ஒன்று ஒவ்வா. தான் நாடிய கருமம் கைகூடவேண்டுமென்று ஒரு சந்நியாசியிடம் அணுகுகிற பாமரன் சந்நியாசத்தின் மகிமையைச் சரியாகத் தெரிந்துகொண்டவன் அல்லன். அத்தகைய காமிய நோக்

கத்துடன் தன்னை அணுகுகிறவர்களுக்குச் சந்நியாசி இடந் தரலாகாது. சந்நியாசியோடு சத்சங்கம் செய்கின்றவனுக்கு உலக ஆசைகள் நீங்குகின்றன; மனத்தெளிவு உண்டாகிறது. வைராக்கியமும் பக்தியும் ஞானமும் ஓங்குகின்றன. இத்தகைய தெய்விக இயல்புகளை நாடி சந்நியாசியிடம் போவது முறை. அவனுடைய சத்சங்கம் நிலைத்த தெய்விக நலனை ஆத்ம சாதகர்களுக்கு நல்குகிறது.

### ரசவாதம்

கீழான உலோகங்களை மேலான உலோகங்களாக மாற்றுவது ரசவாதம். இரும்பு, தாமிரம் போன்றவைகளை வெள்ளியாகவும் தங்கமாகவும் மாற்றுவதற்கான முறைகளை ரசவாதம் புகட்டுகிறது. சந்நியாசிகளுக்கு ரசவாதம் தெரியும் என்று எண்ணி அவர்களுடைய ரசவாத ஞானத்தைத் தங்கள் சுயநலனுக்காகப் பயன்படுத்த விரும்புகிறவர்கள் துறவியர்களை நாடித் திரிவதுண்டு. சித்திகள் பல தற்செயலாய் நல்ல ஆத்ம சாதகர்களுக்கு வாய்ப்பதுபோன்று ரசவாத வித்தையும் சிரமமின்றி சில சந்நியாசிகளுக்குத் தானாக வாய்ப்பதுண்டு. சில மூலிகைகளைப் பார்த்த மாத்திரத்தில் அவைகளிடத்துள்ள மேலாம் சக்தியை ஞானமார்க்கத்தில் போகிறவர்கள் தெரிந்து கொள்கிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் குருவாகிய தோதாபுரிக்கு ரசவாதம் தெரிந்திருந்தது. ராமகிருஷ்ணருக்கே அவர் அதைச் செய்து காட்டினார். ஆனால் அத்தகைய செயல் உலக நடைமுறைக்கு ஒவ்வாததென்று அந்த அரிய குருவும் அரிய சிஷ்யரும் அதை ஒதுக்கித் தள்ளிவைத்தனர். அது சாத்தியம் என்பதை அறிந்துகொள்ளுதற்கு மட்டும் அதை அவர்கள் ஆராய்ச்சி செய்து பார்த்தனர். ஆனால் சான்றோர்கள் உலக நடை

முறைக்கு ஒவ்வாத அத்தகைய செயல்களில் ஈடுபடமாட்டார்கள். சந்நியாசி ஒருவனுக்கு மண்ணும் பொன்னும் ஒன்றே; வாழ்வும் மரணமும் ஒன்றே; உலகம் இருப்பதும் ஒடுங்குவதும் ஒன்றே. ஆதலால் சரியான சந்நியாசி ஒருவன் ரசவாத வித்தையில் ஒருபொழுதும் தன் கருத்தைச் செலுத்தான்.

## வைத்தியம்

'வாதம் கெட்டால் வைத்தியம்' என்பது ஒரு பழமொழி. அதாவது ரசவாதத்தில் கருத்தைச் செலுத்துகிறவர்கள் மூலிகைகள் பலவற்றின் அற்புதமான சக்தியை அறிய வருகின்றனர். அதினின்று அரிய ஒளஷத வகைகள் பலவற்றை ஆயத்தப்படுத்த ஆரம்பிக்கின்றனர். சித்த வைத்தியமும் ஆயுர்வேதமும் உருவெடுத்தது இவ்விதங்களிலாம். மக்களுக்கு நல்ல மருந்து வகைகளைச் செய்து கொடுப்பது நல்ல சேவையாகிறது. ஆனால் பொருள் ஈட்டுதல் பொருட்டோ ஜீவனோபாயத்தின் பொருட்டோ மருந்து வகைகளைச் செய்பவர்களும் கையாளுபவர்களும் சந்நியாசிகள் ஆகமாட்டார்கள். மக்கள்மீது வைத்துள்ள அன்பின் காரணமாக ஒளஷதங்களை ஆயத்தப்படுத்திக் கொடுக்கலாம். அல்லது பிறரிடமிருந்து ஒளஷதங்களை வாங்கி மக்களுக்கு இலவசமாக வழங்கலாம். ஆயினும் இத்துறையில் துறவியானவன் ஓரளவுக்கு மேல் கருத்தைச் செலுத்தலாகாது. மக்களுக்குச் செய்யும் பணிவிடைகளில் இது ஒன்றாகிறது. ஆனால் இது சரீர எண்ணத்திலேயே மனதைக் கட்டுப்படுத்தி வைக்கிறது. சரீர உணர்வைக் கடந்து மேலே போவது சந்நியாசியின் குறிக்கோள். மருத்துவத்துறை நல்லது எனினும் சரீர உணர்வைக் கடப்பதற்கு அது உதவாது.

ஆதலால் எவ்விதமான வைத்தியத்தையும் சந்நியாசி ஒருவன் தொடர்ந்து செய்து வரலாகாது. காயசித்திக்கான ஔஷ-தங்கள் இருக்கின்றன. அவைகளில் கருத்தைச் செலுத்து-வது ஆத்ம சாதனத்துக்குப் பெரும் தடையாகும். காயம் இன்றைக்கு அழிந்துபட்டுப் போவதும் இரண்டு மூன்று நூறுண்டுகளுக்குப் பிறகு அழிந்துபட்டுப் போவதும் ஞானிக்கு ஒன்றேயாம். காயம் இருக்கும்பொழுதே காயத்-தைப் பற்றிய எண்ணத்தை ஒழித்திருப்பவன் சந்நியாசி. நிழலை எங்ஙனம் யாரும் பொருள்படுத்துவதில்லையோ அங்ஙனம் சரீரத்தைப் பிராரப்த கர்மத்துக்கு ஒப்பப் பேணி வருதற்கிடையில் அது இருப்பதைப் பற்றியோ அழிவதைப் பற்றியோ ஒரு பொழுதும் எண்ணுதிருப்பவனே சந்நியாசி ஆகிறுன்.

## ஜோதிடம்

ஜோதிட சாஸ்திரத்தில் கருத்தை மிகச் செலுத்தும் கூட்டத்தார் உலகில் இருக்கின்றனர். ஜோதிட சாஸ்திரம் தன்னளவில் உண்மையானதே. ஆனல் அதைச் சரியாக ஆராயவோ பயன்படுத்தவோ தெரிந்திருப்பவர்களைக் காண்பது அரிது. பொருளீட்டுதல் பொருட்டு ஜோதிடம் பழகு-பவர்களுக்கு அதன் நுட்பமான பகுதி மனதுக்கு எட்டாது. பிறரிடம் வாழ்க்கையைப் பற்றிய ஆசைகளையும் மேலாம் நம்பிக்கைகளையும் ஊட்டுதற்பொருட்டு ஜோதிடம் சொல்லு-கிறவர்களுக்கும் அதன் நுட்பமான பகுதிகள் விளங்க-மாட்டா. உண்மையை உள்ளபடி இயம்பிப் பழகுகிறவர்-களுக்கே அதன் உட்கருத்துக்கள் யாவும் மனதில் உதிக்-கின்றன. ஆனல் ஜோதிட சாஸ்திரம் கர்மபலனில் பற்றுவைப்-பதை அடிப்படையாகக் கொண்டது. கர்மபலனில் பற்றே

அக்ஞானத்தினின்று வந்துள்ளது. அக்ஞானம் பிறவியைப் பெருக்கிக்கொண்டே போகிறது. பிறப்புஇறப்பைப் பொருள் படுத்தாதவன் சந்நியாசி. இம்மையிலும் மறுமையிலும் கர்ம பலன்களையெல்லாம் மனதால் துறப்பவனே சந்நியாசி. கர்ம பலன் எதுவாயினும் அதைச் சந்நியாசி சரீரத்தோடு விட்டுவிடுகிறான்; மனதில் வாங்கிக்கொள்வதில்லை. மனதில் கர்மபலனை வாங்கிக்கொள்ளாததனால் அப்பலன் சரீரத்துக்கு அனுகூலமாக வரினும் பிரதிகூலமாக வரினும் மனதில் சந்நியாசி அதை ஏற்றுக்கொள்ளுதல் இல்லை. ஆதலால் ஜோதிட சாஸ்திரத்தையும் அவன் அறவே புறக்கணிப்பவன் ஆகிறான். நல்ல கிரக பலன், கெட்ட கிரக பலன் என்பனவெல்லாம் சந்நியாசிக்கு இல்லை. நல்ல நாள், கெட்ட நாள் என்பதும் அவனுக்கு இல்லை. பொருந்திய இடம், பொருந்தாத இடம் என்பதும் துறவிக்கு இல்லை. கால தேச நிமித்தம் மயமாய் பிரபஞ்சம் இருக்கிறது. ஈண்டு நிமித்தம் என்பது காரணகாரியமாக வருகிற கர்மபலன். சந்நியாசி ஒருவன் காலத்துக்கு அதீதத்தில் இருக்கின்றான். தேசம் அல்லது இடத்தையும் கடந்தவன் ஆகிறான். கர்மத்தில் கட்டுப்படாதவனாகிறான். காலதேச நிமித்தத்தைத் தன் மனதிலிருந்து அறவே தியஜித்தவனே தியாகியாகிறான். இம்மூன்றையும் மூன்று மனோவிகாரங்கள் எனக் கருதி இவைகளைச் சந்நியாசி ஒதுக்கித் தள்ளி வைக்கிறான். ஆதலால் அவனுக்கு ஜோதிட சாஸ்திரத்தில் பொருள் ஒன்றுமில்லை.

## துடைக்கப்பட்ட சரீரம்

சரீரத்தை எடுத்துள்ள ஜீவர்கள் அனைவரும் சரீரத்தை மரணத்தின் வாயிலாக நீத்தே ஆகவேண்டும். நீத்த சரீரத்தைப் பிறகு என்ன பண்ணுவது என்பது ஒரு பெரிய

கேள்வி. வெவ்வேறு சமுதாயங்கள் இக்கேள்விக்கு வெவ்வேறு விடைகள் அளித்திருக்கின்றன. அவர்கள் அளித்திருக்கின்ற விடைகளினின்றே அவர்கள் அடைந்துள்ள மனபரிபாகம் வெளியாகின்றது. பல சமுதாயங்கள் சடலத்தைப் பெட்டிகளில் பத்திரப்படுத்தி அவைகள் அழிந்துபட்டுப் போகாதிருக்கும்படி செய்து பூமியில் புதைத்து வைக்கின்றனர். சரீரம் அழியாதிருக்கும்வரையில் அதன் மற்ெருரு பகுதியாகிய ஆத்மாவும் அழிவதில்லை என்பது அவர்கள் நம்பிக்கை. ஆனால் இந்த நம்பிக்கை உண்மையை அடிப்படையாகக் கொண்டதன்று. சரீரம் என்பது ஆத்மா அணிந்துகொள்கிற ஒருவித அங்கி. தனது இயல்புக்கும் பண்புக்கும் ஏற்ப ஆத்மாவானது தனது சரீரத்தை ஓயாது மாற்றிக்கொண்டே போகிறது. முட்டையை உடைத்துக் கொண்டு குஞ்சு வெளியே வரும்பொழுது முட்டையோடானது எப்படிப் புறக்கணிக்கப்படுகிறதோ அப்படிப் பயன் படாத ஒரு சரீரத்தை ஒதுக்கித்தள்ளிவிட்டு மற்ெருரு சரீரத்தை எடுக்கிறது ஆத்மா. அது உதறித்தள்ளிய சடலத்தைப் பிறகு எப்படி வேண்டுமானாலும் அழித்துத் தள்ளலாம். பிணத்தைத் தகனம் பண்ணுவது இந்திய மக்களுடைய தனிச் செயல் என்றே சொல்லலாம். காயம் பொய்யானது என்பதையும் செத்தபின் அது பொருளற்றது என்பதையும் நிரூபிப்பதற்கே அது சுட்டெரிக்கப்படுகிறது. சுட்டெரிப்பதன் மூலம் அதிலுள்ள பஞ்ச பூதங்கள் உடனடியாகப் பிரித்துத் தள்ளப்படுகின்றன. வேறு சரீரங்கள் உண்டாவதற்கு அப்பூதங்கள் அப்போதைக்கப்போதே பயன்படுகின்றன. சமுதாயத்தின் ஆரோக்கியத்துக்கும் அது சிறந்த உபாயமாகிறது. ஆதலால் இந்தியாவில் செய்வது போன்றே மற்ற தேசத்தவர்களும் சவத்தைச் சுட்டெரிக்கும் பழக்கத்தை இன்றைக்குக் கையாண்டு வருகின்றனர்.

சரீரம் அமைவதற்கு மூலப்பொருள்களாக இருப்பவை கள் பிருதிவி, அப்பு, அக்னி, வாயு, ஆகாசம் என்ற ஐம் பூதங்களாம். இவ் ஐந்தினுள் ஆகாசம் செயலற்றிருக்கிறது. ஏனைய நான்கு பூதங்களும் செயல் புரிந்து வருகின்றன. பிணத்தை இந்த நான்கு பூதங்களுக்கு உரியதாக்குவதை அறிந்தோ அறியாமலோ எல்லாரும் செய்து வருகின்றனர். பிணத்தை மண்ணினுள் புதைப்பதன் மூலம் பிருதிவி பூதத் துக்கு முக்கியமாக அது ஒதுக்கப்படுகிறது. நீரினுள் போடுவதன் மூலம் அப்புப் பூதத்துக்கு அது அளிக்கப்படு கிறது. தகனம் செய்வதன் மூலம் அக்னி பூதத்துக்கு முக்கியமாக அது கொடுக்கப்படுகிறது. காற்றில் உலர்ந்து அழிந்துபட்டுப்போக விட்டுவிடுவதன் மூலம் வாயு பூதத் துக்கு அது இரையாக்கப்படுகிறது. இந்த நான்கு உபாயங் களும் சடலத்தை அழிப்பதற்குச் சரியான உபாயங்களே எனினும் அக்னிக்குக் கொடுப்பதே பல விதத்தில் மேலான முறை எனலாம். இனி சூழ்நிலையை அனுசரித்து இந்த நான்கு முறைகளுள் எதை வேண்டுமானாலும் கையாள லாம். விறகு ஏராளமாக அகப்படக் கூடிய இடத்தில் தகனம் பண்ணுவது சிறந்தது. சாகுபடி ஒன்றுக்கும் உத வாத பொட்டல் நிலம் ஏராளமாக இருக்கின்ற இடத்தில் சவத்தைப் புதைக்கலாம். நீர் ஏராளமாக இருக்குமிடத்தில் நீரினுள் சவத்தைப் போட்டுவிடலாம். எவ்வுயிரும் வசிக்க முடியாத கற்பாறை மயமான இடத்தில் சவத்தைக் காற் றுக்கு உரியதாக்கலாம். இந்த நான்கு விதமான உபாயங் களும் சற்று ஏறத்தாழ உலகில் உள்ள சமுதாயங்களுக் கிடையில் நிகழ்ந்து வருகின்றன.

சந்நியாசி ஒருவன் உகுத்த உடலைப் பிறகு என்ன செய் வது என்பது பெரிய கேள்வியாக இருந்து வருகிறது.

அதைச் சமாதியில் வைப்பதுதான் முறை என்று பலர் கருதி வருகின்றனர். சந்நியாசியினுடைய சடலத்தைத் தகனம் செய்யலாகாது என்னும் கொள்கை பலர்க்கிடையில் வேரூன்றியிருக்கிறது. காசியில் பொதுவாகச் சந்நியாசியினுடைய சடலத்தைக் கல்லில் கட்டி கங்கை நீரினுள் மூழ்கிப் போகச் செய்கின்றனர். அது ஜலசமாதி என்னும் பெயர் பெற்றுள்ளது. ஆக, பொதுவாக இந்தியாவில் சந்நியாசியினுடைய சடலத்துக்கு நிலசமாதி அல்லது ஜல சமாதி வைப்பது வழக்கமாக இருந்து வருகிறது. சிலர் உயிரோடிருக்கும் பொழுதே தங்களுக்காகவென்று சமாதி மந்திரம் கட்டுவதிலும் பிறகு அதைப் பரிபாலிப்பதற்குப் பொருள் தேடுவதிலும் கருத்தைச் செலுத்தி வருகின்றனர். அப்படி உடலின்மீது கருத்தைச் செலுத்துகிறவர்கள் எல்லாரும் பதிதர்கள் ஆகிறார்கள். அன்னவர்களைச் சந்நியாசிகள் எனலாகாது. ஆத்மசொரூபம் இன்னதென்று தெரியாது உடல் சொரூபம் ஒன்றைத்தான் அறிந்திருக்கிற அசுரகணங்களாக அன்னவர்கள் இருந்து வருகிறார்கள்.

சந்நியாசிகளுள் முற்றிலும் மனபரிபக்குவமடைந்து மேல் நிலைக்கு வந்திருப்பவர்கள் பரமஹம்ஸர்கள் என அழைக்கப் படுகின்றனர். பூலோகத்தில் வந்து பிறந்து தங்கள் வினையை முடித்துக்கொண்டு திரும்பவும் அவர்கள் பரத்தினைச் சார்வது ஹம்ஸப் பறவைகள் பறந்து போவதோடு ஒப்பிடப்பட்டிருக்கிறது. ஹம்ஸம் என்னும் சொல் அன்னப் பறவையைக் குறிக்கிறது; ஜீவாத்மனையும் அது குறிக்கிறது. ஜீவாத்மன் முக்தி எய்துங்கால் ஹம்ஸமானது பரமஹம்ஸமாகிறது. அன்னப்பறவை வானத்தில் பறந்து செல்லும் பொழுது அது சென்ற வானவெளியில் அடையாளம் ஒன்றையும் விடுவதில்லை. அதேவிதத்தில் பரமஹம்ஸர்கள் பூவுலகில்

வந்து பிறந்து வாழ்ந்திருந்து மறையும்பொழுது அடையாளம் எதையும் அவர்கள் விட்டுச் செல்வதில்லை. சந்நியாச விரதம் பூணும் பொழுதே அவர்கள் பஞ்ச பூதங்களால் ஆகிய உடலத்தை உள்ளத்தினின்று அறவே துறந்தவர்கள் ஆகிறார்கள். சமாதிநிலை எய்தியவர்கள் உடலில் நெடுங் காலம் இருக்கிறார்கள் என்பது உண்மையல்ல. உடல் உயிர் தரித்திருக்கின்றபொழுதே உடல் வாழ்வு அவர்களுக்குரிய தல்ல. பிறகு உடலத்தை அவர்கள் உகுத்தான பிறகு அதில் அவர்களுடைய சைதன்யம் நிறைந்திருக்கிறது என்பது குருட்டு நம்பிக்கை. அந்த உடலுக்குச் சமாதி மந்திரம் கட்டி அதனுள் அதை எழுந்தருளப் பண்ணுதலில் பொருளொன்று மில்லை. களைந்த சட்டை யாருடைய சட்டையாயிருந்தாலும் அது கந்தலாய்ப்போகிறது. பண்டிதன் போட்டிருந்த சட்டை கந்தலாகும்பொழுது அதற்குத் தனிச் சிறப்பு இருக்கிறது என்பது பேதைமை. ஞானி ஒருவன் பயன்படுத்தி வந்த உடல் சடலமான பிறகு அதில் தனிச் சிறப்பும் தூய்மையும் இருக்கிறது என்பது அறிவிலார் கொள்கை. செத்த பிறகு மற்ற சடலங்களினிடத்து உண்டாகிற கேடுகள் அனைத்தும் ஞானியினுடைய சடலத்திலும் உண்டாகும். எனவே பொது வாக மற்ற பிணங்களையெல்லாம் எங்ஙனம் பூதங்களுக்கு இரையாக்குகின்றார்களோ அதே விதத்தில் சந்நியாசியினு டைய உடலையும் பிணமான பிறகு சௌகரியம் போல் எந்த பூதத்துக்கு வேண்டுமானாலும் இரையாக்கலாம். இன்றைக்கு ஜனத்தொகை உலகெங்கும் அதிவேகத்தில் விரிவடைந்து வருகிறது. உயிரோடிருப்பவர்களுக்குப் போதிய அளவு இடமில்லாது தவிக்கின்றனர். செத்த பிணத்துக்கு ஆறடி இடம் வேண்டுமென்று இந்த நெருக்கடியில் நிலம் ஒதுக்கி வைப்பது முறையன்று. இனி, சந்நியாசி ஒருவன் தனது

ஜீவ வியக்தியையே அடியோடு கலைப்பதை லட்சிய மாகக் கொண்டிருக்கிறபொழுது அவன் உடலை உகுத் தான பிறகு அந்தச் சடலத்துக்கு ஒரு தனியிடம் வேண்டு மென்று ஒதுக்கி வைப்பது பொருந்தாது. அவன் ஜீவ வியக் தியை அழித்து ஒதுக்கியதை அனுசரித்து அவனுடைய உட லத்தையும் தகனத்தின் மூலமாக அல்லது ஜல சமாதியின் மூலமாக உடனடியாகக் கலைத்துத்தள்ளுவதே முறையாகும். அப்படிச் செய்வதுதான் சந்நியாச லட்சியத்தை மற்றவர்கள் அறிந்து கொண்டதற்கும் தங்கள் அளவில் அதை அனுஷ் டித்து வருவதற்கும் அறிகுறியாகும்.

சந்நியாசியின் சரீரத்தைத் தகனம் பண்ணுவதைப் பற்றிய நியமனம் ஒன்று உண்டு. பொதுவாக உலக மகன் ஒருவன் உயிர் துறந்தான பிறகு அவனுடைய உடலத்துக்கு பிதிர்மேதயக்ஞம் என்னும் கிரியை செய்து அக்னியின் வாயி லாக முன்னோர்கள் உலகுக்கு அவன் அனுப்பப்படுகிறான். உலக மகன் ஒருவன் உடலத்துக்கு அத்தகைய கிரியை பொருத்தமானது. ஆனால் சந்நியாசி ஒருவனுடைய உடலத் துக்கு அத்தகைய கிரியை ஒருபொழுதும் பொருந்தாது. அவன் முன்னோர்களுடைய உலகுக்குப்போகிறவனும் அல் லன்; பின்னோர்களுடைய உலகுக்கு வருபவனும் அல்லன். பரத்தில் அவன் இரண்டறக் கலந்துள்ளான். அந்த முயற் சிக்கு ஒப்ப பஞ்சபூதங்களால் ஆகிய சரீரத்தில் வாழ்ந்திருந்த பொழுதே அந்தச் சரீரத்துக்கு ஆத்ம பிண்டம் போட்டு அதைச் செத்துப்போனதாகக் கருதி ஞானாக்னியில் அவன் அதைக் கொளுத்தியுள்ளான். பிறகு அந்தச் சரீரம் உலகில் நடமாடிக்கொண்டிருந்தும் அந்தச் சரீர வாழ்க்கையில் தன்னை அவன் இணைத்துக்கொள்ளவில்லை. அத்தகைய சரீரத் துக்குப் பிதிர்மேத யக்ஞம் என்னும் தகனக்கிரியை செய்வது

ஒவ்வாது. அத்தகைய லௌகிகக் கிரியைகளையெல்லாம் ஒதுக்கித்தள்ளிவிட்டுப் பூதங்களாலாகிய உடலைப் பூதங்களுக்குப் பிரித்துக்கொடுத்தல் என்னும் பான்மையுடன் பக்தி சிரத்தையுடன் அவ்வுடலை நெருப்புக்கோ நீருக்கோ இரையாக்கலாம். இதுவே சந்நியாசி ஒருவனுடைய உடலத்துக்கு உலகத்தவர் செய்யும் இறுதிக் கடமையாகும். 'அவனது உடலின் அறிகுறி ஒன்றுமில்லாது அதை அழித்துவிடுவது தேவாராதனைக் கொப்பானது.

## உலகத்தவர் அடையும் நலன்

ஐம்பூதங்கள் அவைகளின் போக்கில் உலகுக்குப் பயன்பட்டுவருகின்றன. பூதங்கள் ஐந்தில் ஏதேனும் ஒன்று இல்லாது போகுமானால் உடல் வாழ்வு நடைபெறாது. சந்நியாசி ஒருவன் தான் அடையும் நிலையின் வாயிலாகத் தன்னையறியாது உலகுக்குப் பயன்பட்டு வருகிறான். உலகுக்குச் சந்நியாசி பயன்படுவதுபோன்று வேறு எந்த உயிரும் பயன்படுவதில்லை என்று உறுதி கூறலாம். மற்ற உயிர்கள் உலகைத் தங்கள் பொருட்டுப் பயன்படுத்துதற்கே சதா முயன்று வருகின்றன. ஆதலால் அவர்களின் போக்குப் பிரவிருத்தி மார்க்கம் எனப்படுகிறது. உலகில் இருப்பவைகளைத் தங்களுக்காக வென்று பயன்படுத்திக்கொள்ளுமளவு வாழ்க்கையில் அவர்கள் வெற்றியடைந்து வருபவர்களாகக் கருதப்படுகின்றனர். ஆனால் சந்நியாசியினுடைய மார்க்கமோ நிவிருத்தி. பிரவிருத்திக்கு இது நேர்மாறானது. தான், தனது என்பனவற்றையெல்லாம் அவன் உலகுக்கு உரியவைகள் ஆக்குகின்றான். தன்னையே அவன் பரம்பொருளுக்கு உரியவனாக்குகிறான். அதன்மூலம் உலகுக்கு அவன் அணு அணுவாய்ப் பயன்பட்டு வருபவனாகிறான். ஓரிடத்திலிருந்து காற்றானது வெயிலில் காய்ச்சப்பட்டு இலேசானதாக மாறி வானத்தில்

மேல்நோக்கிப் போகிறது. அப்படி அது மேல்நோக்கிப் போவதால் அது இருந்த இடம் காலியாகிறது. காலியாக்கப் பட்ட இடத்துக்கு வேறு இடங்களிலிருந்து காற்று விரைந்து வருகிறது. பெருங்காற்றடித்தல் என்னும் நிகழ்ச்சி அங்ஙனம் நிகழ்கிறது. பெருங்காற்று வீசாவிட்டால் உயிர்கள் நல முற்று வாழமாட்டா. தான் இருந்த இடத்தைக் காலி செய்வதன்மூலம் காற்று உலகுக்கு அங்ஙனம் நலம் விளைவிக் கிறது. சந்நியாசி ஒருவன் அருள் துறையிலே புகுந்து தனது வியக்தியை வலிய அழித்துத்தள்ளுகிறான். தனது இருப்பை ஒழித்து அழிக்கிறான். அச்செயலின் மூலம் மற்ற உயிர்கள் பெருவாழ்வில் ஈடுபடுவதற்கு மறைமுகமாக அவன் தூண்டு கோல் ஆகிறான்.

न कर्मणा न प्रजया धनेन त्यागेनैके अमृतत्वमानशुः

**ந கர்மணா ந ப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வமானசு:**

என்னும் வேதவாக்கியத்தின் மகிமை அவன் மூலம் நிரூபிக் கப்படுகிறது.

உயிர்கள் அனைத்தும் ஆசையினால் தூண்டப்பெற்றுக் கர்மங்கள் செய்கின்றன. ஆசைகளை நிறைவேற்றுதலில் போட்டியும் பொறாமையும் ஓயாது வந்துகொண்டிருக்கின் றன. ஆசைகளை நிறைவேற்றுதலில் ஜீவபோதம் நிலைத் திருப்பதாகிறது. உலக ஆசைகள் அனைத்தையும் அறவே துறந்தவன் சந்நியாசி. ஆதலால் அவன் சரீரத்தின் மூலம் நிகழ்கிற கர்மங்கள் ஆசையினால் தூண்டப்பட்டவைகள் அல்ல. பிராரப்த கர்மத்தின் வேகத்துக்கு ஒப்ப இறைவ னது திட்டம் ஆசையற்ற சந்நியாசியின் மூலம் நிகழ்ந்து வரு கிறது. ஆதலால் எக் கர்மமும் சந்நியாசியைப் பந்தப்படுத்து வதில்லை. அவன் மூலம் நிகழ்கிற கர்மங்கள் மற்ற உயிர் களுக்கு இடைஞ்சல் ஆகமாட்டா.

பிரஜாவிருத்தி அல்லது சந்தானவிருத்தி ஆசையை அடிப்படையாகக் கொண்டது. காமம் என்னும் ஆசைக்கு அடிமைப்பட்டு இனவிருத்தி பிரபஞ்சமெங்கும் உயிர்கள் அனைத்திடத்தும் நிகழ்ந்து வருகிறது. உயிர்களின் எண்ணிக்கை பெருகுமளவு அவ்வுயிர்களுக்கிடையில் போராட்டமும் குழப்பமும் அதிகரிக்கின்றன. தன் உள்ளத்தினுள் காமதகனம் செய்தவன் சந்நியாசி. ஆதலால் பிரஜாவிருத்திக்கும் அவனுக்கும் வெகுதூரம். அவன் சந்தானமற்று இருப்பதால் வாழ்க்கைத் திட்டம் எதுவும் அவனுக்குத் தேவையில்லை. தற்செயலாய் நிகழ்ந்து வருகிற வாழ்க்கைக்கு அவன் சாக்ஷியாக இருந்து வருகிறான். மகப்பேறு வேண்டாம் என்று அம்முயற்சியினின்று விலகியிருப்பவனே உலக வாழ்வு என்னும் விளையாட்டை இனிது விளையாடி முடிக்கிறான். நன்கு விளையாடுகிறவனுக்கு வெற்றியைப் பற்றியோ தோல்வியைப் பற்றியோ கவலையில்லை. தனது களியாட்டத்தைச் சரியாகக்கொண்டு செலுத்துதலில் அவன் பரமானந்தம் அடைகிறான். சந்நியாசிக்கே அது சாத்தியமாகிறது. தனந்தேடுகிறவர்களெல்லாரும் ஏதேனும் ஒருவிதத்தில் பிறர்க்குரியவைகளைத் தமக்குரியவைகள் ஆக்குகிறார்கள். பிறரிடமிருந்து ஏதேனும் ஒரு வழியில் கவர்ந்தெடுக்காது யாருமே செல்வத்தைச் சேகரிக்க முடியாது. செல்வத்தைச் சேகரிப்பவர்களெல்லாரும் உயிர்களுக்கிடையில் வேற்றுமையை வளர்க்கின்றனர். வேற்றுமை உணர்வினின்று ஏனைய கேடுகளெல்லாம் உருவெடுக்கின்றன. செல்வத்தில் சிந்தையைச் செலுத்தாதவன் சந்நியாசி. தான் பிக்ஷையாக ஏற்று உண்ணும் உணவையே உள்ளிருக்கும் ஈசுவரனுக்கு நைவேத்தியமாக அவன் கருதுகிறான். ஆதலால் செல்வம் சேகரித்தல் என்னும் செயலினின்று விலகியிருப்பதன் மூலம் உலகுக்கு அவன் பெரு நன்மை விளைவிக்கிறான்.

மேகமானது மழையாகப் பெய்து தன் உருவத்தைத் துறப்பதன் மூலம் மண்ணுலகிலிருக்கும் உயிர்கள் அனைத்துக்கும் உணவாகிறது; உணவை ஆக்கவும் செய்கிறது. அதே விதத்தில் துறவியானவன் தனது ஜீவபோதத்தை சந்நியாசம் செய்வதால் தானே பேரானந்தமடைகிறான்; மற்ற உயிர்களுக்கும் பேரானந்தத்தை நேராக அல்லது மறைமுகமாக வழங்குகிறான். உலகுக்குச் சாந்தியுண்டாவது சந்நியாசியின் மூலமாக. உலகிலே அருள்துறையில் உயர்வு உண்டாவது சந்நியாசியின் மூலமாக. வாழ்வின் மேலாம் லட்சியத்தை மறந்திருப்பவர்களுக்கும் அதைப்பற்றிப் பராமுகமாக இருப்பவர்களுக்கும் தன் வாழ்வின் மூலம் ஞாபக மூட்டி அவர்களை உயர்நிலைக்கு இழுப்பவன் சந்நியாசி. ஆகர்ஷண சக்தி பொருள்களையெல்லாம் ஒன்றுபடுத்துவது போன்று சந்நியாசியின் பேர் அருள்நிலை உயிர்கள் அனைத்தையும் பரமானந்தத்தில் ஒன்றுபடுத்துகிறது.

நல்ல கனிகளை உண்டுபண்ணும் விருக்ஷங்களைக் கற்பக விருக்ஷங்கள் எனலாம். நல்ல பாலை ஏராளமாகச் சொரிகிற ஆவினங்களைக் காமதேனுக்கள் எனலாம். சுகப்பிரம்மம் போன்ற சந்நியாசிகளைத் தவமிருந்து பெற்றெடுக்கிற குடும்பிகளைப் பார்வதி பரமேசுவரன் சொரூபங்கள் எனலாம். உலக நலத்துக்காக உலகில் முற்றத் துறந்தோர் கூட்டம் பெருகவேண்டும் என்று கருதி அதற்கேற்பத் தங்கள் வாழ்வைத் திருத்தியமைக்கும் குடும்பிகள் உலகிலே வாழ் வாங்கு வாழ்பவர்கள் ஆகிறார்கள். அங்ஙனம் நல்வாழ்வு வாழ்பவர்கள் மூலம் தெள்ளிய சந்நியாசிகள் சமுதாயத்தில் ஓங்குவார்களாக. சமுதாயத்தின் தரத்துக்கு அளவுகோலாயிருப்பது சந்நியாச ஆச்ரமம்.

## ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் இயற்றிய

### பிற நாடகங்கள்

| | | |
|---|---|---|
| விரத வீரர் பீஷ்மர் | ரூ. | 2-50 |
| ஏகலைவ்யனின் குருபக்தி | ... | 2-50 |
| தானவீரன் கர்ணன் | ... | 2-50 |
| பாண்டவ கௌரவ பெருமை | ... | 2-50 |
| ஹரிச்சந்திரன் | ... | 2-00 |
| தவப்புதல்வர்கள் | ... | 2-00 |
| வாலிமோட்சம் | ... | 2-00 |
| பாதுகாபட்டாபிஷேகம் | ... | 1-75 |
| விபீஷணன் சரணாகதி | ... | 1-50 |
| தபோபலன் | ... | 1-00 |
| மார்க்கண்டேயன். | ... | 1-00 |

